# ஏழைகளின் குடும்பக் கலை



வெளியீடு :



நேரு பதிப்பகம்

14 உஸ்மான் ரோடு, சென்னை-17.

# ஏழைகளின் குடும்பக் கலை

மானிட இயல் அறிஞர்
பிலோ இருதயநாத்

விற்பனை உரிமை:




61 D, உஸ்மான் ரோடு, சென்னை—17.

# பதிப்புரை

நமது நாட்டின் பற்பல பாகங்களில் உள்ள மக்கள், அவரவர் இயன்ற அளவு சமூகப் பணி செய்து மக்கள் சமுதாயத்திற்கு உதவி செய்து வருவது பரம்பரையான பழக்கம்.

முன்னேறிக் கொண்டிருக்கும் சமுதாயத்தின் தேவைகள் ஏராளம். அதை ஒட்டித் தொழில்கள் வளருவது இயற்கை; நியதி. அந்த முறையில் ஏழைகள் பலர், தமது குடும்பத் தொழிலாகப் பற்பல தொழிலைச் செய்து வருகிறார்கள். தொன்று தொட்டு நம் மக்கள் சிலர் கலைவண்ணம் மிக்க, பயன் மிகுந்த தொழில்களைச் செய்து வருகிறார்கள். அவ்வாறு செய்யும் தொழில்கள் சிலவற்றைப்பற்றி எழுதியுள்ளார் பிலோ இருதயநாத் அவர்கள்.

திரு. பிலோ, 'ஏழைகளின் குடும்பக்கலை' என்ற பெயரில் பல பத்திரிகையில் எழுதியுள்ள கட்டுரைகளின் தொகுப்பு இது. இதில் கூடை முடைதல், குடைசெய்தல், சிறந்த பறவைகளின் பாதுகாப்பு, முதலிய பல தொழில்களைச் செய்யும் விதம் பற்றி அறிந்து எழுதியுள்ளார். அவர் சொல்லியவாறு செய்து வாழ்வில் பயன்பட இயலும். அந்த அளவுக்குப் இந்த நூல் பயன்படும் என்ற நம்பிக்கை எங்களுக்கு உண்டு.

27-9-65
சென்னை-17.

நேரு பதிப்பகத்தார்

# முன்னுரை

வாசகர்கள், ''காடர்களைக் கண்ட விதம்'' என்ற ஒரே பீடிகையை நான் இயற்றிய எல்லா நூல்களிலும் காண என்ன காரணம்? என்று கேட்கலாம்.

ஒவ்வொரு மலையிலும் காட்டிலும் வாழும் மக்களைப் பற்றிய செய்திகளைத் தனித்தனியாக அவர்களுடைய பழக்கவழக்கங்களுடனும், பாடல்களுடனும் அந்தந்த நூல்களில் கொடுத்திருக்கின்றேன். ஆனால், அந்தந்த நூல்களைத் தனித்தனியாக வாங்கிப் படிக்கும் என் அன்பர்கள், 'நான் எப்படிக் காட்டில் சென்று காடர்களைக் கண்டேன்.' என்று தெரிந்துகொள்ள விரும்புவார்கள் அல்லவா?

ஆகையால் என் காட்டுக் கட்டுரைகளை அதிகமாக வாசித்து ரசித்திருக்கும் என் அன்பர்களுக்காகவே, இங்ஙனம் ஒரே பீடிகையாக ''நான் காட்டில் எங்ஙனம் காடர்களைக் கண்டேன்,'' என்ற செய்தியைச் சுருக்கமாக முதலில், ''காடர்களைக் கண்டவிதம்'' என்ற தலைப்பில் கொடுத்துள்ளேன்.

இதனால், தயவுசெய்து 'கூறியதையே கூறல்' என்பதாக வாசகர்கள் நினைக்கக்கூடாது. அங்ஙனம் காடர்களையும், மலைவாசிகளையும் காணச் செல்லும்பொழுது, சில ஊர்களையும் சில கிராமங்களையும் கடந்து செல்ல வேண்டும் அல்லவா? அப்படிச் செல்லும்பொழுது நான் அந்தந்த ஊர்களைச் சுற்றிப் பார்த்து, அங்கிருக்கும் ஆலயங்களைப் பற்றியும், பல மக்களுடைய வாழ்க்கைக்குப் பயன்படும் பல கைத் தொழில்களைப் பற்றியும், மேலும் பொதுமக்கள் தெரிந்து

கொள்ளவேண்டும் என்ற பல ரசமான செய்திகளைப் பற்றி யும் சேகரித்துப் பல பத்திரிகைகளில் கொடுத்திருக்கிறேன். இங்ஙனம் காட்டில் பழகும் பொழுது பல காடர்களிடம் காட்டில் கண்டவைகளையும். காட்டில் கேட்டவைகளையும் கதை வடிவத்தில் தனித்தனியாக எழுதிப் பல பத்திரிகை களில் கொடுத்ததுண்டு. அங்ஙனம் கொடுத்த செய்திகளைத் தனித்தனியாக நூலாக்கினேன்.

அப்படி நூலாக்கினுலும், நான் காட்டில் காடர்களைக் கண்ட விதத்தைத் தெரிந்துகொள்ள விரும்புவார்கள் அல்லவா?

ஆகையால் என் நூல் ஒவ்வொன்றிலும் நான் ''காடர் களைக் கண்ட விதம்'' பற்றியும், அவர்களைப் பற்றி செய்திகளையும் விளக்கமாக முன்னுரையில் கொடுத் துள்ளேன்.

இந்நூலில் வெளியிடப்பட்டுள்ள ஒவ்வொரு கட்டுரை யிலும், அந்தந்த மக்கள் வழப்படும் பழக்கவழக்கங்கள், சூழ்நிலைகள் அப்படியே எடுத்துக் காட்டப்பட்டு இருக் கின்றன. இவை வெறும் கதைகளல்ல. சமுதாய வளர்ச்சி யையும், சரித்திரத்தையும், காலங்களையும் நிர்ணயித்துக் கதை உருவத்திலே எழுதப்பட்ட கட்டுரைகள். சில இடங்களை வாசிக்கும் பொழுது சரித்திர ஏடுகளைப் படிப் பதைப் போன்ற உணர்ச்சிகூட ஏற்படலாம். சரித்திரத் தையும் மனித சமுதாய வளர்ச்சியையும் தெரிந்து கொள் வதற்கு இவை இன்றியமையாதவை. சரித்திரத்தைப் படிப்பதால் ஏற்படும் சலிப்பும், தத்துவத்தைக் கற்பதால் ஏற்படும் சிரமமும் இதில் தோன்ருது.

தும்பிகள் பூக்கள் தோறும் பறந்து சென்று தேனைச் சேகரித்து வைத்தால், அதைக் காடர்கள் கொண்டு வந்து

குடித்து மகிழ்வது போல, நானும் பல காடுகளுக்குச் சென்று, அக்காட்டு வாசிகளிடம் பழகி பலவகை மக்களிட மிருந்தும், அவர்களது அதிசய பழக்கவழக்கங்களும் சிறந்த குணங்களும் ஆகிய தேனைச் சேகரித்துக்கொண்டு வந்து எழுதிய கட்டுரைகள் இங்கு இடம் பெற்றுள்ளன.

இந்தியாவில் ஆதிகாலம் முதல், முறையான தொடர்ச்சியான வரலாறு எழுதும் பழக்கம் இருந்தது இல்லை. ஆங்கிலேயர்கள் தொடர்பு ஏற்பட்ட பின்னரே மேற்கூறிய வகையில் வரலாறு எழுதும் முறை தோன்றியது என்பதை நாம் நேர்மையோடு ஒப்புக்கொள்ள வேண்டும். நமது நாட்டை அரசாண்ட ஆங்கிலேயர், நம் நாட்டு மக்களின் வரலாற்றை அறிய விரும்பினார்கள் அதற்குத்தக்க சரித்திர நூல்கள் இல்லாததை அறிந்தார்கள். சரித்திரச் செய்திகளைச் சிறிதளவு கொண்டுள்ள கல்வெட்டுகளும், செப்பேடுகளும் பற்பல இடங்களில் சிதறிக் கிடந்தன. அவைகளை ஆதாரமாகக்கொண்டு அக்காலத்தில் ஆங்கில அரசாங்கத்தாரும் அநேகப் பாதிரி மார்களும், மாக்களாக மலையில் மறைந்து வாழும் சில மக்களின் சமூகத்தில் சீர்த்திருத்தங்கள் செய்யப் புகுந்தார்கள். அங்ஙனம் புகுந்தவர்கள், தங்களுக்குத் தெரிந்த, புரிந்த, தாங்கள் அறிந்து கொண்ட சில செய்திகளைப் பற்றி ஓர் அளவுக்கு ஆங்கிலத்தில் எழுதினார்கள். ஆனால் அவர்கள் எழுதியவை சங்ககால நூல்களையும், காடர்களின் மொழிகளையும் தெரிந்து கொண்டுஎழுதியவை அல்ல. ஆயினும் அதாவது செய்தார்களே என்று நாம் நன்றி உள்ளவர்களாக இருக்கவேண்டும்.

இந்திய மொழிகளில் ஆதிவாசிகளைப் பற்றி ஒரு கட்டுரை கூடப் பத்திரியையில் வெளிவராததைக் கண்டு அன்று வருந்தினேன். ஆனால் ஆங்கிலத்தில் புத்தகம்

வெளிவந்ததே ஒழிய, காட்டில் வாழும் மக்களைப் பற்றி. அன்று அரசாண்ட மேலை நாட்டினர்களும், இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் வரை எவ்விதமான அக்கறையும் எடுத்துக் கொள்ளவில்லை. மேலும், இந்த ஆதிவாசி களிடையே சமூக சேவை செய்வதற்கு முன்வந்த மக்களும், சங்கங்களும் அன்று கிடையா. போதாக் குறைக்குக் காட்டில் வாழும் ஆதிவாசிகளில் சில பிரிவினர்களை, ''குற்ற பரம்பரையினர்'' (Criminal tribes) என்று பிரித்து வைத்திருந்தார்கள். 1947-ஆம் ஆண்டில் இந்தியா சுதந்திரம் அடைந்தபின், இச்சட்டம் நீக்கப்பட்டுவிட்டது. அந்த நிலைமையில் நான் இந்தியக் காடுகளில் வாழும் ஆதிவாசிகளிடமும் பிற மக்களிடமும் பழகி காட்டை விட்டு வீட்டை அடைந்தது அவர்களுடைய வரலாறுகளை ஆராய்ந்து, சிலப்பதிகாரம், மணிமேகலை, முல்லைப் பாட்டு, கலிங்கத்துப் பரணி, தொல்காப்பியம், எட்டுத்தொகை, பதினென் கீழ்க் கணக்கு முதலிய பழங்கால நூல்களையும், பாரதியார் கவிதைகளையும், பிற நூல்களையும் ஆதாரமாகக் கொண்டு, ஒவ்வொன்றையும் துருவித் துருவிப் பார்த்துச் சான்றுகள் காட்டி, என் வாழ்க்கைப் போராட்டத்தினிடையே கிடைத்த சிறிதளவான நேரத்தைப் பயன்படுத்திக் கொண்டு, எழுதிய கட்டுரைகள் இங்கு இடம் பெற்றுள்ளன.

அன்று இந்தியாவில் ஆதிவாசிகளிடம் பழகிக் கட்டுரையாக எழுத யாரும் முன்வராததைக் கண்டு கலங்கினேன். ஆனால் அன்று ஆங்கிலப் பத்திரிகைகள் தவிர இந்திய மொழிப் பத்திரிகைகள் மிகமிகக் குறைவு. இந்தியாவில் பேசப்படும் எந்த மொழிப் பத்திரிகையிலும் இதைப் போன்ற கட்டுரைகள் முதன் முதலில் வெளிவந்ததில்லை. ஆங்கிலத்தில் ஒன்றிரண்டு வந்துள்ளன.

பழைய வரலாறுகள் எதிர்கால வாழ்விற்கு வழிகாட்டும் விளக்குப் போன்றவை. எனவே நம் நாட்டைப் பற்றிய பல துறை வரலாறுகள் மிகமிக முக்கியமானவை என்பதை உணர்ந்தேன். அவைகளில் ஒன்று ஆதிவாசிகளைப் பற்றிய வரலாறு ஆகும்.

பழைய காட்டு மக்களைப் பற்றியும், ஆதிவாசிகளைப் பற்றியும் அறிந்து கொள்ளவேண்டும் என்ற ஆர்வத்தால், சுமார் இருபத்தி ஏழு ஆண்டுகளுக்கு முன்னே சில காடுகளுக்குச் செல்லத் தொடங்கினேன். பஸ் வசதியும், வண்டி வசதியும் இன்று இருப்பது போல், அன்று எனக்கு இல்லை, நடந்தும், வைக்கோல் ஏற்றிச் செல்லும் லாரியிலும், மாட்டு வண்டியிலும் ஏறியும் சென்றேன். இன்னும் நான் சமயம் கிடைத்தால் லாரியில் பிரயாணம் செய்வதுமுண்டு. நான் கண்டு வந்த செய்திகளைப் பற்றி எழுதிக் கட்டுரையாகப் புகைப்படங்களுடன் பல பத்திரிகைகளில் பிரசுரம் செய்தேன். ஆதிவாசிகளிடம் பழகி நான் அடைந்த பலன்கள் ஏட்டில் அடங்கா.

''மானிட இயலைப்பற்றி ஆராய்ந்து துருவித் துருவி ஆயிரம் பக்கங்கள்கூட எழுதலாமே'' என்பர். ஆனால் பட்டம் பெறவேண்டியவர்கள் மட்டுமே அவ்விதம் விரிவாகப் படிக்க வேண்டும்.

ஓரளவுக்கு எல்லா பொது மக்களும் தெரிந்துகொள்ள வேண்டுமென்று எண்ணி ஒவ்வோர் இனத்தாரைப் பற்றியும் சரித்திரச் சான்றுகள் கொடுத்து எம்மதத்தினருக்கும், எந்த இனத்தினருக்கும் மனம் புண்படா வண்ணம் நடுநிலை நின்று, இயன்ற வரையில் ஒவ்வோர் இடத்துக்கும் பிரயா

ணம் செய்து ஒரு முறைக்கு ஒன்பது முறைகள் அவர்களைக் கேட்டுச் சந்தேகங்களை நீக்கிக்கொண்ட பின்னரே சுருக்க மாகவும் தெளிவாகவும் எழுதப்பட்ட கட்டுரைகள் இவை.

சிற்சில இடங்களில் ஒரே செய்தியை மீண்டும்கூறியுள் ளேன். அதனைக் கூறியதுகூறல் என்னும் குற்றமாகக் கொள்ளாது, தனித்தனியாகக் காடர்களைப் பற்றித்தெளிவு படுத்தும் பொருட்டு கூறியதாகக் கொள்ளவேண்டும்.

வரலாறுகளை ஆராய்ந்து எழுதுவது, கதைகளை எழுது வதுபோல் எளிதான காரியமன்று. ஒவ்வொன்றையும் துருவித் துருவிப் பார்த்துச் சான்றுகள் காட்டி எழுத வேண்டும். அன்றியும் ''எம்மதமும் சம்மதமே'' என்று எந்த மதத்தினருக்கும் மனம் புண்படாமல் காய்தல் உவத் தல் இல்லாமல், நடுநின்று செம்பொருள் காண வேண்டும்.

என்னுடைய வாழ்க்கைப் போராட்டத்தினிடையே கிடைத்த குறைந்த நேரத்தைப் பயன்படுத்திக் கொண்டு காட்டிலும், மலைகளிலும், குடிசைகளிலும் வாழ்ந்த காலத் தில் என்னால் இயன்ற வரையில், எனது சிற்றறிவுக்கெட் டிய வரையில் இதனை எழுதி முடித்தேன். ஆயினும் சுமார் இருபதாண்டுகளாக இதனை நூல் வடிவில் வெளியிடமுடிய வில்லை. காலத்தையும் செல்வத்தையும், உழைப்பையும் செலவிட்டு ஏன் நாம் இக் கவலையைப் பழக்கிக் கொண் டோம்? நாம் ஏன் காடுகளைச் சுற்றி இவைகளைச் சேகரித் துப் பத்திரிகையில் வெளியிட வேண்டும்? என்று சில சம யங்களில் வருந்தியதுண்டு. ஆனால், ஆனந்தவிகடன், அமுதசுரபி, பர்மாஷெல் செய்தி, இந்து, இனமுழக்கம், இயற்கை, ராணி, கங்கை, கல்கி, குமுதம், கல்கண்டு கலை, கண்ணன், கலைமகள், கலைக்கதிர், காதல், மெயில்,, மாலா, மஞ்சரி, முத்தாரம், முழுமதி, முன்னணி, முல்லை,

நல்லாயன், நவசக்தி, நவ இந்தியா, புதுமை, பொன்னி, பூஞ்சோலை, ரேடியோ, ரவி, சுதேசமித்திரன், சவுத் ரயில் நியூஸ், சக்தி, சாந்தி, சந்திர ஒளி, தென்றல், திரு இருதய தூதன், தினமணிச்சுடர், தினத் தந்தி, தமிழ், துப்பாக்கி, உமா, வாழ்க்கை, வான்மதி, டியூரிஸ்ட்கையிட், இலெஸ்ட் ரேடட் வீக்லீஆப் பம்பாய், சந்திரிகா முதலிய பத்திரிகைகளின் பேரன்பு மிக்க ஆசிரியர்கள் காட்டிய அன்பும், செய்த பெரிய உதவியுமே என் உயிரையும் பொருட்படுத்தாமல் காடுகளுக்குள் நுழையத் தைரியத்தையும் விடா முயற்சியையும் உண்டாக்கின. பத்திரிகை ஆசிரியர்களின் அன்பே, இன்று இந்நூல் வெளிவருவதற்குக் காரணமாக அமைந்தது சிற்சில நேரங்களில் உண்மையாக ஆராய்ச்சி நூல் எழுதும் உண்மை உழைப்பாளிக்குத் தமிழ்நாட்டில் மட்டுமல்ல, இந்தியாவிலேயே இடமில்லை, என்று நினைத்துப் பல நாட்கள் நகரத்திற்கே வராமல் காட்டில் காடர்களுடன் உழைத்துச் சாப்பிட்டதும் உண்டு. இருபதாண்டுகளுக்கு முன்பே இந்நூல் வெளிவந்திருக்க வேண்டியது. ஆனால், "என்னுடைய பேரும் ஊரும் முதலில் தமிழ் நாட்டில் பல பத்திரிகையின் வாயிலாகப்பரவிய பின்னர், இந்நூல் வெளிவருவது நலம்" என்று கற்ற நண்பர்களும், நூலாசிரியர்களும் கூறினர்கள். ஆகையால் எழுதி வைத்திருந்த என் கட்டுரைகளை எல்லாம் பல பத்திரிகையின் வாயிலாக ஆங்கிலத்திலும், தமிழிலும் வெளியிட்டேன். அங்ஙனம் வெளிவந்த என்னுடைய பல கட்டுரைகளை வாசிக்கத் தொடங்கிய என்னுடைய நண்பர்களும், வாசகர்களும் என்னை 'வடநாட்டினன்' என்றும், 'பாதிரியார் என்றும், "சிங்கள தேசத்து வேதம் போதிக்கும் குரு" என்றும் நினைத்ததாகக் கூறினர்கள். பலர் என்னை பற்றி, "ஆணு? பெண்ணு?" என்றுகூடப் பத்திரிகையின் மூலம் எழுதிக் கேட்டார்கள்.

மற்றும் சிலர் என்னைக் காட்டுஇனத்தைச்சேர்ந்தவன் என்றே நினைத்தார்களாம். "என் அன்பர்களுக்கும், வாசகர்களுக்கும் இந்தச் சந்தேகங்களை எவ்விதம் நீக்கு வது?" என்று சிந்தனை செய்தேன்.

"இந்தச் சந்தேகங்களை எல்லாம் நீக்க உங்களுடைய வாழ்க்கை வரலாற்றைக் கட்டுரையாக எழுதிஉங்களுடைய புகைப்படத்தையும் கொடுங்கள்" என்று 'கலை' ஆசிரியர் பாலுசகோதரர்கள் கேட்டார்கள். நானும் கொடுத்தேன்.. என் கட்டுரையைக் 'கலை' ஆசிரியரும் 'கலை' காரியாலயத் தார்களும் வாசித்த பின் எனக்கு, "மானிட இயல் அறி ஞர்" என்ற பட்டம் கொடுத்து அதைக் கலை, தீபாவளி மலரில் பிரசுரித்தபின்தான் பலர் நான் "தமிழன்" என் பதையே தெரிந்து கொண்டார்கள்.

இதற்குப் பின் பலர் என்னைக் காணவேண்டிப் பொருள் உதவி செய்து தங்கள் ஊருக்கு வரும்படி அழைத் தார்கள். பல பள்ளிக்கூடங்களிலும், கல்லூரிகளிலும் பத்திரிகை காரியாலயங்களிலும், பல சங்கங்களிலும் பேச வேண்டும் என்று அழைத்தார்கள். காடர் கள் உபயோகப்படுத்தும் எல்லாப் பொருள்களையும் குதிரை வண்டியில் கொண்டு போய்க் காட்டி, பொதுமக்க ளுக்கும் மாணவர்களுக்கும் பயன்படும்படி பல சொற் பொழிவுகளாற்றினேன்.

இந்தியாவில் ஓர் இந்தியன் இவற்றை எல்லாம் செய்ய முடியுமா? என்பதே பலருடைய சந்தேகம். அதை, காடர்கள் கொடுத்த பல காட்டுப் பொருள்களால்நிவர்த்தி செய்தேன்.

இங்ஙனம் பல இடங்களில் பேசும்பொழுது, "உங்களுடைய நூல்கள் ஏதாவது வெளிவந்துள்ளனவா?" என்று பலர் கேட்டார்கள். சிலர் பத்திரிகை மூலம் கடிதம் எழுதியும் கேட்டனர். அவர்களுக்கெல்லாம் "வெளிவரும்" என்று கூறினேனேயல்லாமல் என் மனவேதனையைக்கூறவில்லை.

உலகத்தில் மொழி இல்லையானல் நாகரீகம் என்பதே தோன்றியிருக்காது. ஆகையால் காடர்களின் நாகரிகத்தைப் பற்றிய முழு விவரங்களையும் அறிய வேண்டி அவர்களுடைய மொழிகளைப் பற்றித் தெரிந்து கொண்டேன். அவர்களுடைய உணவுகளை உண்டு பழகிக் கொண்டேன். காட்டில் வாழும் மக்களுடைய அம்மொழிகள் எப்படித் தோன்றின என்று அறிய நானும் அவற்றுள் சில மொழிகளைக் கற்றும், எழுதியும் வந்து உள்ளேன். அவைகளில் சில மொழிகளைமட்டும் பல பத்திரிகைகளில் பல கட்டுரைகளில் சேர்த்து இருக்கிறேன்.

பொருளாதார நெருக்கடி இடநெருக்கடி முதலியன காரணமாக என் கட்டுரைகள் நீண்டும், சில சமயங்களில் குறைத்தும் பத்திரிகைகளில் வெளிவருவதுண்டு. இவைகளைக் கண்ட என் கட்டுரைப் பிரியர்கள் பலர், "உங்களுடைய கட்டுரைகளைத் தொடுத்து நூலாக வெளியிடுங்கள்" என்று கூறினர்கள்.

இவற்றிலுள்ள கட்டுரைகள் ஒரே சமயத்தில், ஒரே காலத்தில், ஒரே இடத்தில் உட்கார்ந்து எழுதியவைஅல்ல. பல காடுகளிலும், பல மலைகளிலும் பல ஊர்களிலும் இருந்துகொண்டு பல பத்திரிகைகளுக்கும், பல இதழ்களுக்கும் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பே இந்நூல்.

'ஏழைகளின் குடும்பக்கலை' என்ற பெயருடன்வெளி வரும் இந்நூல், கல்லூரி இளங்கலை வகுப்பு (பி.ஏ.) மாண வர்க்கும், முதுகலை (எம்.ஏ.) மாணவர்க்கும் துணைப்பாட நூல் ஆவதற்கு உரியது. அதே சமயத்தில் இந்தி யாவின் கலைகளின் வரலாற்றை அறிய விரும்பும் பொது மக்கள் விரும்பிப் படிப்பதற்கும் தகுதி உடையது.

இந்நூல் நம் இந்தியா தேசத்தின் கலை வரலாற்றின் ஒரு பகுதியை அறிவதற்கு உதவியாக இருக்கும் என்று நம்புகிறேன். என்னால் முடிந்தவரை எல் லோரும் புரிந்து கொள்ளும்படி எழுதியிருக்கிறேன். எனக்கு மேன்மேலும் ஆராய்ச்சித் துறையில் ஊக்கம் அளித்த உயர்திரு. மயிலை சீனி—வேங்கடசாமி அவர்களுக் கும் ''கதையையும், சாதாரணக் கட்டுரைகளையும் எழுத வேண்டாம். ஆதிவாசிகளைப் பற்றியும் காடர்களைப்பற்றி யும், காட்டில் சேகரித்த செய்திகளைப் பற்றியும் எழுதுங் கள்: அத்துறையில் இன்று வரையில் யாரும்ஈடுபடவில்லை: உம்மைப்போல் ஈடுபடவும் இயலாது. சங்ககால நூல்களை ஆதாரமாக வைத்துக்கொண்டு, அவர்களது வாழ்க்கை வர லாறுகளைப்பற்றி ஆராய்ந்து எழுதுவது நலம். 'ஆதிவாசி கள், காடர்கள், காடு என்றால் அடுத்தது ''பிலோ இருதயநாத்'' என்று பலர் இன்று நினைக்கின்றனர். அந்த நினைப்பை நீர் இழந்துவிட வேண்டாம்'' என்று எனக்கு எச்சரிக்கையும், யோசனையும் கூறிய திரு. சாண்டில்யன் அவர்களுக்கும், நான் சோர்வடையும்போது, எனக்கு ஊக்க மூட்டி உற்சாகமளித்த நண்பர் திரு. ஆர். விவேகா னந்தம் அவர்களுக்கும் மற்றுமுள்ள எல்லா நண்பர் களுக்கும், இந்நூல் வெளியிட எனக்கு ஊக்கமளித்த திரு. ச. சொக்கலிங்கத்திற்கும் என் நன்றி கலந்த

வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்வதுடன், இனி மேலும் எனக்கு ஊக்கமளிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

இந்நூலில் குற்றங்குறைகளிருப்பின் மன்னிக்குமாறு தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

பிலோ இருதயநாத்.



# ஏழைகளின் குடும்பக்கலை

**ப**ண்டைக் காலத்தில் ஒவ்வொரு ஏழைக் குடும்பமும் சந்துஷ்டியுடன் வசித்து வந்தது. ஒவ்வொரு குடும்பத்திலும் தனிப்பட்ட கலை ஒன்று இயங்கி வந்ததே இதற்குக் காரணம். அக்கலைகள் பெரும்பாலும் நசித்துவிட்டன. அவற்றில் சில பிழைத்திருக்கின்றன. அவற்றிலொன்றை இக் கட்டுரையில் கவனிப்போம்.

சென்னையிலிருந்து சுமார் இருபது மைல் தூரத்திலிருக்கும் கோவள வள்ளிப் புரத்தீவிலே சுமார் நூறு குடும்பங்கள் கூடை முடையும் தொழிலைச் செய்து வாழ்கின்றன.

கோவளத் தீவிலே உள்ள குடிசை வாழ் பெண்கள் இத் தொழிலைக் காலை முதல், மாலை வரையில் தொழிற் சாலைப் பெண்களைப் போலவே இடைவிடாது செய்கின்றனர். இப்படிச் செய்வதைக் கண்ட நான், இவர்கள் சமைப்பதெப்போ? வென்று சிந்தனையில், சுமார் மூன்று மணிநேரங்கள் அவர்களின் குடிசையில் உட்கார்ந்திருந்தேன்.

சிக்கனம், விடாமுயற்சி, கவனிக்கும் சக்தி, மனதிலே நேரம் கணக்கிடும் தன்மை, கண்ணாலும், மோப்பத்தாலும் பதம் அறிந்து கொள்ளும் சக்தி முதலியவைகளை இத் தீவு மக்கள், வர்ணங்களையும் கப்பமஞ்சளையும் கையாள் அள்ளும் அளவுக்கு திறம்படைத்திருக்கின்றனர்.

## பொருள் சேகரித்தல்

சுமார் ஐம்பது மைல்களுக்குள் சுற்றுப்புறங்களிலிருக்கும் பனை ஓலைகளை பல மக்கள் சேகரித்துச் சுமை சுமையாக காம்புகளுடன், கொண்டு வந்து, இத்தீவிலே, குடிசை குடிசையாக விற்பனைக்குக் கொடுக்கிறார்கள். அவைகளைக் காம்பை நீக்கி நல்ல வெயிலில் காய வைக்கின்றனர். இதன் காம்புகளைச் சிலர் விறகாகவும், சிலர் அக்காம்புகளை நார் நாராகக் கிழித்து, கயிறு போலக் கட்டுவதற்கும் உபயோகப் படுத்துகின்றனர். ஓலைகள் காய்ந்த பின், கீத்துக் கீத்தாக, சிறுவர்கள் கிழித்து அளவு பார்த்துக் தனித் தனியாகக் கட்டுக் கட்டி வைக்கின்றனர். இப்படிக் கிழிக்கும் போது சற்று ஏமாந்தால், பழகினவர்களுடைய கைகளையும், கிழித்துக் கொள்வதைக் கண்டேன்.

## வர்ணம் துவைக்கும் கலை

பெரிய சாலையோ பெரிய பானையையோ நிழலிலிருக்கும் அடுப்பின் மேல் வைத்து, அதில் அளவாகத் தண்ணீரை ஊற்றி, நன்றாகக் கொதிக்க வைத்து அதில் முதலில் கப்ப மஞ்சள் தூளை அளவாகக் கொட்டிக் கிளறி விடுகின்றனர். கப்ப மஞ்சள் கரைந்தபின், கடையில் வாங்கிய வர்ணங்களில், எந்த வர்ணத்தைக் கலக்க வேண்டுமோ அவ்வர்ணத்தைப், பானையின் வெந்நீரில் கொட்டிக் கப்ப மஞ்சளுடன் கரைத்து விடுகின்றனர். பிறகு எவ்வளவு ஓலைகள் அப்பானையில் போட வேண்டுமோ, அவ்வளவு ஓலைகளை அளவாகப் போட்டுக் களி கிண்டுதல் போல், கிண்டிக் கிண்டிப் புரட்டிப் புரட்டி விடுகின்றனர். வர்ணங்கள் நன்றாக ஓலையில் பிடிக்கச் சிலர் கொஞ்சம் உப்பும் போடுவதுமுண்டாம். உப்பிட்டால் ஓலையின் வர்ணம் பளப்பளப்பாக இருக்குமாம். ஓலைகளில் வர்ணம் ஏறியதும், வர்ண ஓலைகளை வெந்நீரிலிருந்து எடுத்து வெயில் படாமல், நிழலிலேயே

பிரித்துப் போட்டு, நன்ருக உலர்த்த வேண்டும். வர்ண ஓலையில் வெயில் பட்டால் வெளுத்துப் போகும். ஆறின ஓலைகளை வெள்ளை ஓலைகளுடன் இணைத்துப் பின்னுகின்றனர்.

## முக மலர்ச்சியுடன் முடையும் கலை

ஓலை பின்னும் பெண்களை ஆச்சரியமாகக் காணுவதைக் கண்ட ஒருத்தி, 'தென்னை ஓலைகளைப் பின்னுவதைப் போல் பின்னுவதென்று நினைத்தீரோ?' வென்று ஒரு கேள்வி கேட்டாள்.

'சரி! நீங்கள் தான் விளக்குங்கள்' என்றேன். 'எந்தக் கூடைக்கு எந்த அளவு ஓலைகள் எவ்வளவு வேண்டும். வர்ண ஓலைகள் எவ்வளவு அதற்கு வேண்டும், வெள்ளை ஓலைகளுக்கும், வர்ண ஓலைகளுக்கும் அளவுகள் சரியாக இருக்குமா? வென்று வர்ணப் பானையில், ஓலைகளைப் போட்டு, கிண்டுவதற்கு முன்னமே, நாங்கள் கவனித்துப் பிரித்து விடுவோம். உட்காரும் தடுக்குக்கும், (சிறு சதுரப் பாய்) கூடைக்கும் ஓலைகள் எடுப்பதில் வித்தியாசமுண்டு. அந்தந்தப் பொருள்களுக்குத் தனித்தனியாக ஓலைகளைப் பிரிக்க வேண்டும். ஓலை பின்னும் வேலை முடிந்ததும், ஓலையின் முடிவு உறுதியாகவும், ஓலை மறுபடியும் பிரிந்து போகாமலுமிருக்க, அவைகளை உறுதியாக முடிக்க வேண்டும்.' என்று கூறிக் கொண்டே ஒரு கூடையையும் பின்னி முடித்துவிட்டாள்.

இவர்கள் ஓலை பின்னும்போது, சும்மா இருப்பதில்லை. ஒரே நேரத்தில், ஓலையும் பின்னப்படுகிறது. சிலர் கருவாடுகளையும் பதம் செய்து காய வைக்கின்றனர். சமையல் சமைத்துக் கொண்டே ஓலையும் பின்னுகின்றனர். ஏணையிலிருக்கும் குழந்தையையும் ஒவ்வொரு தள்ளு தள்ளி ஆட்டிக் கொண்டு பாட்டுப்பாடி தூங்கப்படுத்துகின்றனர்.

'நெல்லுக் கிரைத்த நீர் வாய்க்கால்,
வழியோடி புல்லுக்குமாங்கே—பொசியுமாம்'

என்பதைப் போல் குழந்தைக்காக பாடியபாட்டைக் கேட்டுக்கொண்டு மற்றவர்களும் சிரமம் தெரியாமல் ஓலையைப் பின்னி முடிக்கின்றனர். இவைகளை எல்லாம் கூர்ந்து கவனித்த எனக்கு மிகவும் ஆச்சரியமாக இருந்தது.

குழந்தைகளின் விளையாட்டுக் கிலு கிலுப்பு முதல், பெரியவர்கள் உபயோகப்படுத்தும் ஓலைச் சாமான்கள் வரையில் அழகாகவும், ஒருங்காகவும் ஓலையைப் பின்னி, விற்பனைக்கு சுமார் 300 மைல் முதல் 500 மைல்கள் வரை சுற்றளவுள்ள இடங்களுக்கு வண்டி வண்டியாக வியாபாரம் செய்வதை நாம் கவனிக்கலாம். சென்னை வீதியிலும் இவ்வித வண்டிகளை நாம் காணலாம். இக்கலை மழைக் காலங்களில், வெயில் காலங்களில் செய்வதைவிட மிகவும் குறைவாகச் செய்யப்படுகிறதாம். இத் தொழிலுக்கு வெயில் மிகவும் அவசியம்.

இவ்வளவு சிரமத்துடன் செய்து முடிக்கும் பொருள்களை காலணாவுக்கும், நாலணாவுக்கும் விலை கேட்டு அவர்களை பொதுமக்களில் சிலர் வயிற்றில் அடிக்காமலும், அவர்களுக்கு மழை காலங்களில் செய்வதற்கு ஏதாவது ஒரு கைத்தொழிலுக்கு வேண்டியவசதி அரசாங்கம் செய்து கொடுத்து, அவர்களை இனியாகிலும் அணைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

# கோடைக்குக் குடையல்ல

ஒரு தொழிற்சாலையை நிர்வகிக்கவேண்டுமாயின் அதற்குப் பொருளாதார உதவிகள் வேண்டும். தொழில் களில் உடனே பலன் தரும் தொழிலென்றும், பல மாதங் களுக்குப் பின்னர் பலன் தரும் தொழிலென்றும், இருவகை யாகப் பிரிக்கலாம். மற்றும் காலையில் முதலிட்டுத் தொழிலை ஆரம்பித்தால், மாலையில் பலன் தரும் தொழிலுமுண்டு.

நாள், வாரம், மாதம், வருஷமென்றும் தற்காலத்திலே தொழில்கள் பலவகையாகப் பிரிக்கப்படுகின்றன. அத் தொழில்களில் வாரத்திலோ அல்லது மாதத்திலோ பலனடையும் தொழில்களில் ஒன்றே இத் 'தாழங்குடைத்' தொழில்.

சமீபத்திலே, சைதாப்பேட்டை தாலுக்கா, ஒக்கியம் துரப்பாக்கம் கிராமம், பேட்டை என்ற ஊருக்குச் சென் றேன். அப்பேட்டையில் நான் இதற்கு முன்பு காணுத தோர் குடிசைத் தொழிலைக்கண்டு பிரமித்துப் போனேன்.

லாரி லாரியாக தாழம் குடைகளை, ஆயிரக்கணக்கில் ஏற்றுமதி செய்கிருர்கள். அதைக்கண்ட நான், "என்ன இவ்வளவு தாழம் குடைகளா செலவாகின்றன?" என்று ஆச்சரியமாகக் கேட்டேன்.

"ஆண்டுதோறும் சுமார் ஐம்பதாயிரம் குடைகளுக்கு மேல் செலவாகின்றன. ஆனால் இவ்வாண்டு சற்று அதிகமாகவே செலவாகும் போலிருக்கிறது. இவ்வாண்டு மழை அதிகமாக இருப்பதே இதற்குக் காரணமாகும். சென்னைக்கு அடுத்து இப்பேட்டையைத் தவிர மற்ற எவ்விடத்திலும் இத்தொழிலைச் செய்வதில்லை. ஆனால் சில ஊர்களில் மட்டும் பனை ஓலைக் குடைகளும், பர்மா, மலேயா முதலிய இடங்களில் மட்டும், ஒருவித அகலமான ஓலைகளால் குடை செய்து. அதையே தொப்பிபோல் தலையில் அணிந்து கொள்வதுமுண்டு. ஆனால் தாழம் ஓலைகளால் இவ்விதக் குடைகள் இங்குதான் செய்கிறார்கள்.

இக்குடையை ரயில்வே லஸ்க்கர்களுக்கு ஐந்தாயிரமும், சென்னை நகராண்மைக் கழகத்திற்குச் சுமார் ஐந்தாயிரமும், சில்லரையில் சில ஆயிரக்கணக்கிலும் ஒரு வருஷத்திலே செலவாகின்றன.

பேட்டை வாசிகளில் ஒருவர், "இக்குடைகளை வாங்குவோர் சிலர் வாய் கூசாமல் வீதிகளில், 'நாலணாவுக்குக் கொடுக்கமுடியுமா?' என்று கேட்கிறார்கள். இக்குடைகளை எவ்வளவு சிரமத்துடன் இப்பேட்டை வாசிகளாகிய நாங்கள் செய்கிறோம் என்பதை நீங்களே நேரில் இன்று கண்டால் நன்மையாக இருக்கும். பத்திரிகைகளிலும் எழுதுவதற்கு உதவியாக இருக்கும்" என்று கூறினர்.

## செய்யும் முறை

'தாழம்பூ என்றால், பாம்புகள் வாழுமிடங்கள்' என்று ஞாபகமுண்டாகும்படியான பல இடங்களுக்குச் சென்று, தங்கள் உயிர்களையும் பொருட்படுத்தாமல் தலையில் வைத்துக்கொள்ளும் பூவையும், அதன் ஓலைகளையும் சுமைசுமையாகக் கட்டிக்கொண்டு வந்து, காயவைத்து,

பிறகு சுமார் ஏழு முதல் ஒன்பது மணி நேரம் தண்ணீரில் ஊறவைத்து ஓலைகள் நிமிர்ந்தபின் நிழலில் காயவைக்கிறார்கள். காயவைத்த நீண்ட தாழம் ஓலைகளின் இருபுறங்களிலுள்ள முட்களை நகத்தால் நேராகக் கழித்தும், நடுமுள்ளை மட்டும் கத்தியால் கிழித்தும் எடுத்துவிடுகின்றனர். முள்ளை கிழிக்கும் போது அவர்களுக்குப் பல காயங்கள் கத்தியாலும், முள்ளாலும் ஏற்படுவதுண்டு. முட்கள் நீங்கின ஓலைகளைச் சிறுமிகளோ, அல்லது பெரியவர்களோ நல்ல ஓலைகளாகவும், மட்டமான ஓலைகளாகவும் இரு பிரிவுகளாகப் பிரிக்கிறார்கள். நல்ல ஓலைகளையும், மட்டமான ஓலைகளையும் தனித்தனியாக எடுத்து, தனித்தனியான வட்டமாக ஒன்றின்மேல் ஒன்றாகப் பெரிய வட்டமாகச் சுற்றுகிறார்கள்: நல்ல ஓலைகளை மட்டும் பாய்போல் உறுதியான ஈச்சம் ஈர்க்கால் பாய் வடிவாகத் தைக்க வேண்டும். ஓலை தைக்கும் பணியைச் சாதாரணமாக மங்கையர்களே செய்கின்றனர்.

ஓலை ஒழுங்குபடுத்தும் வேலை முடிந்ததும், மூங்கில் கொம்பை ஐந்து துண்டுகளாக, எந்த அளவுக்குத் தாழம் குடைகள் வேண்டுமோ அந்த அளவுக்கு வெட்டி, வட்டமாக வளைத்துக் கட்டுகிறார்கள்.

பிறகு ஈச்சங் கசங்கைக்கொண்டு, கைப்பிடிக்குப் பக்கத்திலே நாரால், கட்டவேண்டும். பிறகு இரண்டரை சாண் மூங்கில் துண்டுகளைப் பத்தையாக்கி நடுத் துவாரத்தில் கெட்டியாகச் செருகி, குடை அளவுக்கு வட்டமாகவும் வர, "நடுக்கட்டு" என்று நாரால் கட்டுகிறார்கள். பிறகு மத்தியில் தலைக்கட்டும், ஓரத்தில் ஒரு கட்டும் கட்டி, பிறகு குடை அளவுக்கு வெளியில் நீண்டிருக்கும் குச்சிகளை அளவாக வெட்டி விடுகிறார்கள். கடைசியில் முற்றின மூங்கிலை பன்னிரண்டு பாகம்

க்கை கவையாகப் பிளந்து, அதைக் குடையின் நடுவில், செருகி, நடு மூங்கில், கைப்பிடியின்காலை குடையுடன் மேற்புறத்தில் மடித்துச் செருகி உறுதியாகக் கட்டிவிடு கிறார்கள். கட்டிய பிறகு, ஓலையில்லா மூங்கில், குடைச் சட்டத்தின்மேல் முதலில் மட்டமான, துண்டு தாழம் ஓலை களை குடை மூங்கில் சட்டத்துடன் சேர்த்துத் தைக்க வேண்டும்: ஒரு வட்டம் துண்டு ஓலைகளைத் தைத்தபின், பாய்போல் தைத்த, நல்ல ஓலையை. குடையின் மேல்மூடி அதையும் ஊசியால் ஆழமாகத் தைத்துச் குடையை பூர்த்தி செய்யவேண்டும்.

இக்குடையை இவ்வளவு சிரமத்துடன் செய்து குறைந்த விலைக்கு விற்பனை செய்வதால், இது ஏழைகளுக்கு மாரியில், ஒரு சிறந்த குடையாகவும், சிறந்ததோர் குடிசைக் கலையாகவும் இருக்கின்றது.

இக்குடிசைத் தொழிலை, நல்ல முறையில் முன்னேற்ற மடைய தக்க வசதிகள் ஏற்படுத்தி, இப்பேட்டை வாசிகளை உற்சாகப்படுத்தினால், இன்னும் சில ஆண்டுகளுக் குள் மற்றத் தொழில்கள் முன்னேற்ற மடைந்திருப்பதைப் போல், இதையும், "மடக்கும் தாழம் குடை"யாக, மற்ற நாடுகளிலிருப்பதைப்போல் "மடங்கும் ஓலைக்குடை, ஓலை விசிறி"யாகச் செய்து (சீனா, மலேயா ஓலை விசிறி) காட்டு வார்கள் என்பதில் யாதொரு சந்தேகமுமில்லை அன்றோ!

# தேயிலை பயிரிடுதல்

"என்னப்பா! ஒரு சிங்கில்போடு" என்று தற்காலத்தில் கஞ்சிக்கும் வழியில்லாத ஏழைகளும் "டீ" குடிக்கத் தலைப்பட்டிருக்கிறார்கள். "டீ" குடிப்பது நாகரீகமான வாழ்க்கை என்று எண்ணுகிறார்கள். பட்டிக்காட்டிலும் "டீ" கடைகள், ஆள் மேலும் "டீ" கடைகள்; வானிலும் "டீ"; கடைகள்; இவ்விதம் பல டீ கடைகள் உண்டாகி விட்டன.

இப்படி ஏழைகள் முதல் செல்வர் வரை ஆவலுடன் பருகிவரும் "டீ"யைப் பற்றி நாம் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமல்லவா?

தேயிலை எப்பொழுது உண்டாயின என்று சொல்ல இயலாது. இச்செடிகள் இரண்டாயிரம் அடி முதல், எட்டாயிரம்அடி வரையுள்ள உயரத்தில் நன்ருக வளரும். செடிக்கு மித உஷ்ணமும், எண்பது முதல் தொண்ணூறு அங்குலம் வரை மழையும் வேண்டும். இதற்குச் சரிவான தரையே வேண்டும். மண் ஈரம் காக்கக் கூடியதாக இருக்க வேண்டும்.

தேயிலைச் செடிகள் சாதாரணமாய் 150 ஆண்டுகளுக்கு மேல் இருக்கின்றனவென்று புள்ளி விவரம் காட்டுகிறது.

புதிய காடுகளை அழித்த இடங்களில், இது நன்றாகப் பயிராகின்றன. சில மரங்களை மட்டும் நிழலுக்காக விட்டு விட்டு, மற்றவைகளை வெட்டுவார்கள். தரையைச்சமமாக்கி தேயிலைக்கு வேண்டிய எரு முதலியவைகளை மண்ணுடன் கலப்பார்கள். தேயிலைச் செடிகள் ஒரு ஏக்கருக்கு சாதாரணமாய் 3,000 முதல் 4,000 செடிகள் வரையில் பயிராகும். நல்ல வளமுள்ள நிலங்களாக இருந்தால் சாதாரணமாய் வாரத்திற்கு ஒருமுறை இலைகளைப் பறிப்பதென்றால் நம் வீட்டில் "கீரைகளைப் பறிப்பது" என்று நினைப்பார்கள் சிலர்.

கண்களை மூடிக்கொண்டு பறித்தால், அத்தேயிலைகளைத் தொழிற்சாலையில் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்; ஏனென்றால் தேயிலை பறிக்கும் போது, "தாயிலை"யையும். "மீனிலை"யையும் செடியிலேயே விட்டு விட்டு மீதியைத் தான் பறிக்க வேண்டும். காம்பைப் பெரியதாகவும் விட்டுக் கிள்ளக்கூடாது. கொழுந்து விட்டுக் கிள்ளக்கூடாது. கொழுந்து இலையாகப் பார்த்துக் கிள்ள வேண்டும், தேயிலைத் தோட்டத்தில் ஆட்கள் வேலை செய்யுங்கால், நாம் தூரத்திலிருந்து பார்த்தால், "பச்சைத் துணியில் வெள்ளைப் பொட்டு வைத்தாற்போல" காணப்படுகிறது. கிழக்குத் தொடர்ச்சி மலைகளிலும், மேற்குத் தொடர்ச்சி மலைகளிலும் சில இடங்களில் தேயிலைத் தோட்டங்கள் இருக்கின்றனவென்பது எல்லோரும் அறிந்த விஷயமே. அம்மலைத் தொடர்கள் சில இடங்களில் சாதாரண உயரமாகவும், சில இடங்களில் தலையை நிமிர்ந்து நோக்க வேண்டிய நிலையாகவும் இருக்கின்றன. சாதாரண உயரமாயிருந்தால் கூடை கட்டி தேயிலை பறிக்கிறார்கள். ஆனால் மிகவும் செங்குத்தான உயரமாயிருந்தால் கூடையுடன் தலை கீழாக விழுந்து விடுவார்கள் என்ற நோக்கத்தால் கூடைக்குப் பதிலாக கோணிப் பைகளில் இலைகளைப் பறித்துப்போட்டுக்-

கொள்ளுகிறார்கள். இவர்களுடைய புடவைகள் செடிகளில் சிக்குண்டு கிழிந்து விடுமென்று புடவையின்மேல் கோணியை இடுப்பில் சுற்றிக் கட்டிக் கொள்ளுகின்றனர்.

கூட்டங் கூட்டமாக, சாதாரணமாய் ஆண்களைவிட பெண்கள்தான் இவ்வேலையைச் செய்கின்றனர். சில இடங்களில் பள்ளத்தாக்கிலிருந்து தேயிலையும், காப்பியும், விறகும் தொழிற்சாலைக்குக் கொண்டு வர வேண்டியதாக இருந்தால், சாதாரணமாய் மனிதர்களும் சுமை தாங்கிக் கழுதைகளும் கொண்டு வருவது கடினம். நேரமும் வீணாகும். நான் நேரில் கண்ட சில இடங்களில், மனிதன் நடப்பதே கஷ்டம். தவறி விழுந்தால்...? அதற்காக கீழிருந்து மூட்டைகளாகக் கட்டி இயந்திரங்களின் உதவியால் கம்பிகளின் மூலம் சுமார் இரண்டு மூன்று பள்ளத்தாக்குகளைத் தாண்டியுள்ள பொருள்களை பத்து நிமிஷங்களில் மேலே கொண்டு வந்து விடுகிறார்கள். இவ்விதம் கொண்டு வரும் கம்பிக்கு 'ரோபேயின்' என்று கூறுகிறார்கள். அடி பாதாளத்தில் வேலை செய்யும் உத்தியோகஸ்தர்களின் சில பொருள்களும் ரோப்பேயின் வழியாக மேலே வருவதுமுண்டு.

தேயிலைத் தோட்டத்தைப் பாதுகாப்பதும், பயிர் செய்யும் விதமும் போற்றத்தக்கவை. தேயிலைச் செடிகள் முதலில் சிறிய சிறிய கூடையில் பயிர் செய்யப்படுகின்றன. அக்கூடைகள் ஆழாக்கு அளவு இருக்கின்றன. செடி நன்றாக வளர்ந்தபின், அதைக் கூடையுடன் எவ்விடத்தில் தரையில் வைக்கவேண்டுமோ, அவ்விடங்களில் அப்படியே கூடையோடு நடப்படுகின்றன. அப்பயிர்கள் மிகவும் ஜாக்கிரதையாக பாதுகாக்கப்படுகின்றன. மற்ற மிருகங்களால் பயிர்களுக்குச் சேதமாவதாயிருந்தால் மிருகங்களை உடனே எஸ்டேட்டை விட்டு அகற்றி விடுகிறார்கள். தேயிலை

எஸ்டேட்டுகளில் ஆங்காங்கே பூச்சி பிடித்த தேயிலைச் செடிகளை வேருடன் வெட்டி உடனே தீக்கு இரையாக்கு கிறார்கள். இதனால் மற்ற செடிகளுக்குப் பரவாமலும் அதனால் மக்களுக்கும் தாய்நாட்டிற்கும் வியாதிகள் பரவா மலும் உடனே தடுக்கப்படுகின்றன.

மாதம் ஒரு முறை கொத்தியும், களை பிடுங்கியும், வர வேண்டும். ஆண்டுக்கொரு தடவை ஆழமாகக் கொத்திவிட வேண்டும்.

தேயிலைச் செடிக்கு புதியதாக தயார் செய்யப்பட்ட காட்டு நிலங்களின் இயற்கை உரமே மிகவும் உகந்தது. களையெடுத்த காய்ந்த புல், இலைகள், மிருகங்களின் சாணம், எலும்புத்தூள், பிண்ணாக்கு முதலியன நல்ல உரங்கள்.

இப்படி வளர்ந்த தேயிலைச் செடிகளிலிருந்து, கவனித்து கொழுந்து இலையாகப் பார்த்து சேகரித்து. கடைசியில் தேயிலைத் தொழிற்சாலைக்குக்கொண்டு போவார்கள். தொழிற்சாலையின் வாசலில் மறுபடியும் அவைகளைக் கொட்டி, அவற்றிலிருக்கும் கழிவுகளைத் தள்ளி நன்றாக முதல் ரகமான இலைகளாக தொழிற்சாலைக்குள் போகும்.

தொழிற்சாலையில் 100 பவுண்டு பச்சையிலையை, பதன் செய்யப்பட்ட பின் 25 பவுண்டு தேயிலைதான் தேருமாம். தேயிலை பதன் செய்யும் முறைகளை ஐந்து பாகமாகப் பிரித் துக் கொள்கிறார்கள். சுத்தம் செய்த தேயிலைகளை "சந்து என்று சொல்லப்படும் ஒருவிதத் தட்டில்போட்டு லேசாகப் பரப்புகிறார்கள். இந்த சூட்டு விசிறியின் உதவியால் 18 மணி நேரம் வதக்குகிறார்கள். இங்கு அநேக தட்டுகள் இருக்கின்றன. ஒரே வேளையில் 10,000 பவுண்டு தேயிலை

தயார் செய்யப்படுகின்றன. இதற்குப் பிறகு "சுற்றுதல்" என்று கூறும்படியான ஒரு இரும்புத் தட்டில் போட்டு உருட்டுகிறார்கள். இதற்குப் பின் "தட்டு மேல் தட்டு" என்று சொல்லும்படியான இடங்களில் போட்டு பதன் செய்தபின் "அடுப்பு" என்று சொல்வதில் சிறிய சிறிய தாக வெட்டி, பதன் செய்து, பிறகு முதல் "ரகம்" இரண்டாவது "ரகம்" என்றுபல ரகமாகப் பிரித்து சல்லடை போடுகிறார்கள். கடைசியில் பெட்டிகளில் போட்டு "பாக்கிங்" செய்கிறார்கள்.

இவ்விதமான இடங்களைப் புத்தகங்களில் வாசிப்பதைப் பார்க்கலும், ஒவ்வொரு மாணவ மாணவிகளும் நேரில் கண்டு ரசிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். எஸ்டேட்டுகளில் வேலை செய்யும் மக்கள் சந்தோஷமாயும், முகமலர்ச்சியாயுமிருக்கிறார்கள். காரணம் இங்கு வேலை செய்கிறவர்களுக்கு இலவசமாக இல்லமும், அவர்களுடைய குழந்தைகளுக்கு இலவசமாகக் கல்வியும், காலை பத்து மணிக்குப் பிள்ளைகள் குடிப்பதற்காக நல்ல பாலும், பகல் பன்னிரண்டு மணிக்கு சங்கு கூவியதும் பிள்ளைகளுக்குச் சாப்பாடும் கொடுக்கப்படுகின்றன.

இவைகளைச் சுத்தமாகவும், சுகாதார விதிப்படியும் தயார் செய்திருக்கிறார்களாவென்று கவனிக்கவும், சுகாதார விதிப்படி கொடுப்பதற்கும் மேற்பார்வையிட ஒரு நர்ஸும், ஒரு டாக்டரும் இருக்கிறார்கள்.

காலையில் வியாதிக்காரர்களுக்கு எஸ்டேட் வைத்திய சாலையில் மருந்துகள் கொடுக்கப்படுகின்றன.

எல்லா வேலைகளும் சரியானபடி நடக்கின்றனவாவென்று கவனிக்கச் சிறந்த திட்டங்கள் இங்கு கையாளப்படுகின்றன.

# நீலகிரித் தைலம்

நீலகிரி என்றதுமே, நீலக் கடலில் எத்தனை வகையான மச்சங்கள் மறைந்து வாழ்கின்றனவோ அவ்விதம், நீலகிரியிலும் நாம் தெரிந்துகொள்ள வேண்டிய பல விஷயங்கள் மறைந்திருக்கின்றன. ஒவ்வொரு விஷயத்தையும் துருவித் துருவிக் காணும்போது, நமக்கே பல விஷயங்கள், ஆச்சரியமாக இருக்கின்றன. பல இடங்களையும், பல குடிசைத் தொழில்களையும் கண்ட எனக்கு ஒரு 'தைல செட்டின்' மேல் சிந்தனை ஓடியது. இத் தொழில் முழுவதும் 'ஈ அடிச்சான் காப்பி' போல் ஒரே விதமாகத் தைலம் காய்ச்சக் காரணம் என்னவோவென்று யோசிக்கலானேன்.

இங்கு இத்தைல மரத்தைக் கற்பூர மரமென்றும், கற்பூர இல்லையென்றும் கூறுகின்றனர். உதகையிலிருக்கும் 'கல் கட்டடம்' 1823-ல் ஆங்கிலேயரால் கட்டப்பட்டதாலும், இதுவே இங்கு முதல் கட்டடமென்பதால், நீலகிரியில் இத் தொழில் செய்யத் தொடங்கி, சுமார் 90 ஆண்டுகள்தான் இருக்குமென்று பல பெரியவர்கள் கூறுகின்றனர்.

### தோன்றிய விதம்

முதல் முதலில் மேல் நாடுகளிலிருந்து திரு. சல்வின் துரை என்பவரால், பண்டையில் நீலகிரியிலிருந்த பல பெரி

யவர்களைக் கொண்டு, இம்மரங்களை-இங்கு பயிர் செய்தாலும், இம்மரங்களின் தாயகம் ஆஸ்திரேலியா தேசமாகும்.

முதன் முதலில் நீலகிரி ஜில்லாவில், கோத்தகிரியில் லாங்வுட், காக்பர்ன், சேஞ்சமலை, நாடாடா சோலை முதலிய இடங்களில் 1863-ம் ஆண்டு இந்த மரங்கள் பயிரிடப்பட்டன. ஆனால், இன்று இம்மரங்கள் கோத்தகிரி, குன்னூர், உதகை, கூடலூர், கீழ் கோத்தகிரி முதலிய இடங்களின் மேற் பகுதியில் மட்டும் ஏராளமாகவும் நன்றாகவும் செழிப்பாகவும் வளர்கின்றன. ஆனால் இவ்விடங்களின் அடிவாரங்களில் இது வளர்வதில்லை. இன்று இந்தியாவில் சில மலைப்பிரதேசங்களில் அடிமரம் பருத்து, தென்னை பனை முதலிய மரங்களைப்போல் உயர்ந்து இம்மரங்கள் வளர்ந்தாலும், அதிலிருந்து தைலம் உற்பத்தி செய்தாலும் நீலகிரியில் உற்பத்தியாகும் தைலத்தைப்போல் உயர்ந்த ரகமாகக் கிடைப்பதில்லையாம். சில இடங்களில் சேகரிக்கும் இத் தைலம், நீர் கலந்த கஞ்சிபோலிருக்குமாம். சில இடங்களில் குளிர் மிகுதியால் உரைந்து தேன்போல் கெட்டியாக இறுகிப் போகிறதாம். பிறகு உஷ்ணமான இடங்களுக்குக் கொண்டு வந்ததும் இளகிப் போகிறதாம். நீலகிரியில் முதன் முதலில் நீலகிரித் தைலம் ஐரோப்பிய போர் வீரர்களுக்காக வெலிங்டன் பேரக்ஸில் காய்ச்சப்பட்டதுஎன்றும் சில தொண்டு கிழவர்கள் கூறுகின்றனர்.

### தைலம் காய்ச்சும் கலை

பட்டாணிக் கடையில், பட்டாணி வறுக்கும் அடுப்பு எப்படி இருக்கிறதோ, அதைப் போலிருக்கிறது, இந்தக் தைலம் காய்ச்சும் திண்ணையும், அடுப்பும். இத் திண்ணை அடுப்பின் மேல் ஒரு பெரிய தார் பீப்பாயைப்போல், பாய்லரொன்றை வைத்து, அப்பெரிய பாய்லரையும் திண்ணை அடுப்பையும் ஒன்றாகச்சேர்த்து களிமண்ணால் பூசி

விடுகிறார்கள். திண்ணை வட்டமாகவும், உயரமாகவும், பாய்லருக்கு அளவாகவுமிருக்கிறது. தைலம் காய்ச்சிய பழைய இலைகளை உலர்த்தி 2, 3 நாட்களுக்குப்பின், மறு படியும் அடுப்பிலிட்டு, விறகுக்குப் பதிலாக எரிக்கிறார்கள். திண்ணை அடுப்பின் மேலிருக்கும், பெரிய பாய்லரில் கால் பாகத்திற்கும், அதில் போட வேண்டிய இலைகளுக்கு அள வாகவும் தண்ணீர் ஊற்றி அதில் கற்பூர இலைகளைக்கொட் டித் திணிப்பார்கள். சுமார் இரண்டு, மூன்று பாய்லர்கள் பிடிக்கும் இலைகளை ஒன்றிலேயேபோட்டு அடைப்பார்கள். பிறகு, நம் வீட்டில் இட்டிலிப் பாத்திரத்தை மூடுவதைப் போல் ஒரு மூடியை, இலைகளைத் திணித்தவாறே மூடி, அந்த பாய்லருக்கும், மூடிக்கும் இடையில் சந்தில்லாமல், இரும்பி னால் செய்த, 'கிளிப்பு' போடுகிறார்கள். இக்கிளிப்புக்கு 'அள்ளு' என்று பெயர். இதன்பின் ஆவி வெளிவராம லிருக்க மூடியின் வாய் பாகத்தையும் அள்ளையும் சேர்த்து சுற்றிலும், களிமண்ணால் பூசி மூடுகிறார்கள். இதனால் உள்ளிருக்கும் ஆவி, ஒரு துளிக்கூட வெளியில் வராது.

இந்த மூடிக்கு மேலிருக்கும் துவாரத்திலே, நீண்ட வளைந்த குழாயை வைத்து, அக்குழாயை, பக்கத்திலே சற்று தாழ்ந்த இடத்திலிருக்கும், மற்றொரு சிறிய பீப்பாய் குள்ளிருக்கும், சுற்றுக் குழாயில் சேர்ப்பார்கள். பிறகு சுற்றுக் குழாயின் கடைசி முனையை, அதே பீப்பாயின் அடியிலிருக்கும், துவாரத்தின் வழியாக, அதற்கும் சற்றுப் பள்ளத்திலே இருக்கும் மற்றொரு சிறிய தகரப்பாத்திரத் தில் கொண்டுபோய் சேர்ப்பார்கள். இப்பாத்திரத்தில் முதல் பாய்லரிலிருக்கும் இலைகளிலுள்ள தைலமும், தண் ணீரும் ஆவியாக மாறி வளைந்திருக்கும் குழாயின் மூலம், இரண்டாவது பீப்பாய்க்குள் இருக்கும் சுற்றுக் குழாய்க் குள் வந்ததும், சுற்றுக் குழாயிலிருக்கும் இரண்டாவது பீப்பாயில், 'சில்' என்று வெளியிலிருந்து வந்து ஊற்றும்,

ஊற்று நீரின், உதவியால் நீராவி திரவப் பொருளாக, நீர் கலந்த நீலகிரித் தைலமாக மாறுகிறது. இரண்டாவது பீப்பாய்க்கு எப்பொழுதும் குளிர்ந்த நீர், மற்றொரு குழாயின் மூலம், வெளிப்புறத்திலிருந்து ஊற்றிக்கொண்டே இருக்கவேண்டும். அந்நீர் மற்ெருரு பக்கத்தில் வழிந்து ஓடிக்கொண்டே இருக்க வேண்டும். வெளியிலிருந்து குளிர்ந்த நீரோடை சுற்றுக் குழாயிருக்கும் இரண்டாவது பீப்பாயில், ஊற்றுவிட்டால் அதிலிருக்கும் தண்ணீர் வெந்நீராக மாறுவதுமல்லாமல் தைலமும் ஆவியாகவே வெளியில் செல்லும். ஆகையால் பீப்பாயிலிருக்கும் தண்ணீர் சூடாகாமலிருக்கும்படி வெளியிலிருந்துபீப்பாயில் சதா தண்ணீர் ஒரு பக்கம் ஊற்றவும், அது மற்ருெரு பக்கம் வழிந்துகொண்டுமிருக்க வேண்டும். கால்வாயின் மூலம் வெளித் தண்ணீர் இல்லாவிட்டால் இத்தொழிலைச் செய்ய இயலாது. அங்கே வேலை செய்கிறவர்கள், பீப்பாயிலிருக்கும் வெந்நீரைக் கடைசியில், நீலகிரி குளிருக்கு குளிக்கின்றனரென்ருல், அது எவ்வளவு சூடாக மாறுகிறது என்று நீங்களே தெரிந்து கொள்ளலாம்.

தகரப் பாத்திரத்தில் தைலம் மேலே தங்கும், தண்ணீர் கீழே தங்கும். அந்த தகரப் பாத்திரத்தின் கீழேயிருக்கும் குழாயின் மூலம் சிறிது சிறிதாகவும், அளவாகவும் தண்ணீரை வெளியாக்குவார்கள். கடைசியில் கரண்டியிருல் டின்னின் மேலிருக்கும் தைலத்தை மேலாக எடுத்துப் புட்டிகளில் நிரப்புகிருர்கள். சுமார் ஒரு பாய்லருக்கு ஒன்றுமுதல் நான்கு புட்டிகள் வரையில் தைலம் கிடைக்கும். புட்டிகளில் நிரப்பும்போதே நல்ல மணம்வீசுகிறது. இதைக் கண்ட நான், 'நீலகிரித் தைலம் சுத்தமானதா அல்லது கலப்புள்ளதா?' வென்று எப்படித் தெரிந்து கொள்ளலாம்?—என்று கேட்டேன். 'தைல புட்டியை குலுக்கினுல், அதில் சோடா நுரைபோல் உண்டாகும். அது

கலப்புள்ள தைலமென்று திட்டமாகக் கூறலாம்' என்று எடுத்துக் கூறினர்.

## உழைப்பும் பிழைப்பும்

இரவும் பகலாக உழைத்தால்தான், அதை நம்பி அவர்கள் பிழைக்க முடியும். இத்தொழிலை ஒரு 'நாடோடித் தொழில்' என்று கூறலாம் ஏனென்ருல், சோலைகள் நிறைந்த இடங்களில் தண்ணீர் வசதி இராது. தண்ணீர் வசதி இருக்குமிடங்களில் சோலைகள் இராது. ஆகையால் தண்ணீர் எங்கு வசதியாக, மேட்டுப்பாங்கான இடத்திலிருந்து, பள்ளத்தை நாடி ஓடுகிறதோ, அவ்விடங்களாகப் பார்த்து, தங்கள் 'தைல ஷெட்டை' அமைத்துக் கொள்ளுவார்கள். இவர்கள் பாடுபடுவதைக் கண்ட நான், 'இத்தொழிலை மின்சார சக்தியால் செய்யமுடியாதோ?' என்றேன். அதற்கு அப்பணியாள், 'ஒரு எஸ்டேட்டு துரை மிகுந்த பணச் செலவில் இக்காரியத்தை, மின்சாரத்தின் உதவியால் செய்தார். ஆனல் மின்சாரம் அதிகமாகச் செலவானதோடும், பதமான சூடேற்றவும் முடியவில்லை. கடைசியில் வரவுக்கும் செலவுக்கும் நூற்றுக்கணக்கில் நஷ்டத்தைக் காட்டவே, அவர் அதை நிறுத்திவிட்டார். ஆகையால் மறுபடியும் பழைய முறையிலேதான் செய்யப்படுகின்றன. மேலும், இன்று பட்டினவாசிகளில் பலர், 'இலைகளைப் பாய்லரில் வேக வைத்து, கடைசியில் வடிகட்டித்தைலமெடுக்கிருர்களென்று நினைத்துக் கொண்டிருக்கிருர்கள். ஏனென்ருல் பல பகுதிகளிலிருந்தும் இங்கு வரும் மக்களில், கற்றவர்களும், கல்லாதவர்களும், இத்தொழிலைக் கண்டபின், 'ஓ! இப்படித்தான் தைலம் காய்ச்சுகிறதா? நான் என்னமோ வேக வைப்பது என்று நினைத்தேன்! என்று ஆச்சரியமாக கேட்கிருர்கள்' என்று விளக்கினர்.

## தைலத்தின் உபயோகம்

காரமும், உஷ்ணமுமுள்ள கலப்பில்லா நீலகிரி தைலத்தால் எவ்வளவோ வியாதிகள் குணமாகுமென்று அனுபவமுள்ள நீலகிரிவாசிகள் இன்று கூறுகின்றனர். மேலும் 'தைல ஷெட்'டில் வேலை செய்யும் பணியாட்களுக்கு வியாதி வருவதே இல்லை என்று கூறுகின்றனர்.

ஓடுவாவு, காய்ச்சல், தலைவலி, கால் குடைச்சல், நெஞ்சு சளி, பிரசவ ஜலதோஷம், சுளுக்கு, கழுத்து வலி, குளிர்ந்த சரீரத்தை உஷ்ணப் படுத்தவும், ஜீரண சக்தியை உண்டாக்கவும், வெட்டு காயங்களுக்கும் இத்தைலத்தை உபயோகப் படுத்துகிறார்கள். பொதுவாக சீதபேதி தவிர மற்றெல்லா வியாதிகளுக்கும் அனுபவமுள்ளவர்கள் இத்தைலத்தை உபயோகப்படுத்துவதைக் கண்டேன். பிரசவ மங்கையரும், மற்றும் சிலரும் இந்த இலைகள் வேகவைத்த, வெந்நீரில் ஸ்நானம் செய்கின்றனர். அதனால் தேகத்திலுள்ள வாயு, சீதளம் முதலியவைகள் நீங்குகிறதாம். இவ்வளவு உபயோகமுள்ள இத்தைலத்தை கலப்பில்லாமல் சுத்தமானதாகவே விற்பனை செய்ய தக்க ஏற்பாடுகள் செய்ய வேண்டும்.

## இத் தொழிலை அபிவிருத்தி செய்ய

நாம் செய்ய வேண்டுவன பல உண்டு. ஈண்டு இயற்கையால் இம் மரங்கள் சேதமாவது மட்டுமல்லாமல், செயற்கையாலும் பல மரங்கள் சேதமாகின்றன. விறகுக்காகவும், வீடுகள் கட்ட இடத்திற்காகவும் பல மரங்கள் இன்று வெட்டப்படுகின்றன. இன்னும் சில மரங்கள் கவனிப்பாறின்றியும், தைலத்திற்காக இலைகள் வெட்டும் போது சேதமாகாமலும், மரத்தின் நன்மையைக் கருதி எடுக்காததாலும், இம் மரங்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் குறைவதால் இத்தொழிலும் குறைந்துகொண்டு வருகிறதாம்.

அரசாங்கத்துக் காடுகளையும் புறம்போக்கான இடங்களையும் இங்கிருக்கும் ஆதிவாசிகளுக்கும், ஏழைகளுக்கும் கொடுத்து, பாழாகுமிடங்களை உபயோகமுள்ளதாக்கி இம்மரங்களையும், இத்துடன் அவர்கள் ஜீவனத்திற்காகச் சில விளைபொருள்களைப் பயிர் செய்யும்படியும் ஏற்பாடு செய்தால், விளை பொருள்கள் அபிவிருத்தி அடைவதோடில்லாமல், இக்குடிசைத் தொழிலும் அபிவிருத்தி அடையும் என்பதில் சந்தேகமே இல்லை. கற்பூரச் சோலைகள் அதிகரித்தால் மழைக்கும் அது காரணமாக இருக்குமன்றோ. நீலகிரி முழுவதும் இத்தொழிலை எல்லோரும் செய்யவும், மின்சாரத்தின் சக்தியால் அதிகமாகச் செய்யவும், சோலைகளை பாதுகாக்கவும், இனியாகிலும் நாம் சிரத்தை எடுத்துக் கொள்ள வேண்டும்.

# தமிழ் நாட்டில் இரப்பர் மரங்கள்

தமிழ்நாட்டில் இரப்பர் மரங்கள் என்றதும் மக்களின் சிந்தனைகள் உடனே மலேயா, பர்மா, காங்கோ, அமோசான் முதலிய இடங்களில் இரப்பர் தோட்டங்களில் பணியாற்றும் தமிழ் மக்களிடம் ஓடுவதில் யாதொரு ஆச்சரியமுமில்லை. அன்று இரப்பர் தோட்டத்திலே பணி செய்ய தமிழர்கள் ஆட்டு மந்தைகளைப் போல் கப்பலிலே ஏற்றப்பட்டார்கள். அதே கப்பல் இன்று தமிழனுக்கு, அங்கு இடமில்லையென்று, இறக்குமதி செய்கிறது. 'காலம் மாறிப் போச்சு' என்பது சரிதான் போலும்.

இன்று அதே தமிழர் தமிழ் நாட்டில் இரப்பர் மரங்கள் அதிகஈரமாயும் உஷ்ணமுமுள்ள பிரதேசங்களில் தான் வளரும். இரப்பருக்கு ஏற்ற இடம் நீலகிரி ஜில்லா தொடங்கும் எல்லையில் இரப்பர் மரங்கள் ஆயிரக் கணக்கில் பயிராகின்றன. இவ்விடம் மேட்டுப் பாளையத்திற்கு அருகிலிருப்பதால் குளிரும், வெப்பமும் மிதமாக இருக்கின்றன. இரப்பர் என்னும் ஆங்கிலச் சொல்லுக்கு 'துடைப்பது' என்பது பொருள். அது 'துடை' என்னும் பொருள் கொண்ட, 'ரப்' என்னும் ஆங்கிலேய வினைச் சொல்லிலிருந்து இது பிறந்தது.

## இரப்பர் பால் சேகரிக்கும விதம்

அத்தி, ஆல் முதலிய மரங்களை கீறினல் பால் வடிந்து இறுகுவது போலவே, இரப்பர் மரத்தின் பாலும் மரத்திலிருந்து வடியும்போது. மஞ்சள் கலந்த வெண்மை நிறமாகவும், தேன் போல் கொழ கொழப்பாகவுமிருக்கிறது. இரப்பர் மரத்திலிருந்து பாலை எடுப்பதற்கு கோடை காலமே ஏற்றது என்று கேள்வியுற்று, இவ்வாண்டு கோடையில் உதகைக்குச் சென்ற நான், இக்காட்சியைக் காணச் சந்தர்ப்பம் வாய்த்தது.

இரப்பர், அடி மரத்தில் கைக் கோடாரி கொண்டோ, அல்லது அரிவாள் கொண்டோ, ஓரங்குல ஆழமுள்ளதாக வெட்டி, அவ்வெட்டுவாயின் கடைசியில் தேங்காய் அரை ஓட்டை (கொட்டாங்குச்சி) வைப்பதற்கு வசதியாக ஒரு தகரத் துண்டை, மரத்தில் சொருகி வைத்து, அதன் மேல் ஓட்டைப் பதிய வைக்கிருர்கள். இரப்பர் மரத்தின் கீறலின் வழியாக வடியும் இரப்பர் பால், ஒன்ருகச் சேர்ந்து கொட்டாங்குச்சியில் மொத்தமாக வடிகிறது. மாலை சுமார் இரண்டு, மூன்று மணிக்கு அந்தந்த வெட்டுவாயில் வைத்திருக்கும், தேங்காயின் ஓட்டில் வடியும் பாலையெல்லாம், ஒவ்வொரு மரமாகச் சென்று, ஒரு பெரிய வாளியில் சேகரிக்கின்றனர். ஒருவன் ஒரு நாளைக்கு சுமார் 50 முதல் 100 மரங்களின் பாலைச் சேகரிக்கக்க கூடும். இம்மரங்கள் சுமார் 30 அடி முதல் 50 அடி வரையில் உயர்ந்து, சுமார் 1000 மரங்கள் இங்கு செழிப்பாக வளர்ந்திருக்கின்றன.

## இரப்பர் செய்யும் முறை

வாளியில் சேகரித்த பாலை (glanburn estate) கிளன் பர்ண் எஸ்டேட்டு தொழிற்சாலைக்குக் கொண்டுவந்து

இரண்டடி நீளம், ஒன்றையடி அகலம், இரண்டங்குலம் உயரமுள்ள பல அலுமினியம் பேசன்களில் இந்த இரப்பர் பாலையும், தண்ணீரையும், ஆசிட் திராவகத்தையும் அள வாக ஊற்றி, 24 மணி நேரமான பின், அதை "கேக்" போல எடுத்து, இரண்டு ரோலர்களுக்கிடையில் சமமாகவும் நீட்டமாகவும் வரும்படி விடுகிறார்கள். இங்ஙனம் செய்தபின், பார்த்தால் பெரிய அட்டை போலிருக்கிறது. இதற்குப்பின் அழுத்தும் இயந்திரத்தில் அழுத்தி அதி லிருக்கும் தண்ணீரை வடிகட்டுகிறார்கள். நீர் வடிந்தபின், வரிசை வரிசையாக கொம்புகளின்மேல் அறைக்குள்ளேயே துணி உலர்த்துவதுபோல், உலர்த்துகிறார்கள். இப்படி 48 மணி நேரம் உலர்த்தியபின், எல்லாவற்றையும், ஒரு அறையில் கொண்டுபோய் முதலில் உலர்த்தியது போலவே வரிசை வரிசையாக கொம்பில் உலர்த்துவதுபோல் இரப்பரைத் தொங்க வைக்கிறார்கள். அறை முழுவதும் தொங்க வைத்தபின் கதவை அடைத்து காற்றோ அல்லது உள்ளிருக்கும் புகையோ வெளியில் வராமல் கதவை அடைத்து விடுகிறார்கள். பிறகு அவ்வறைக்கு வெளியில் இரண்டு நீண்ட அடுப்புகள் இருக்கின்றன. இவ்வடுப்பு களின் உள்பகுதி, இரப்பரை இரண்டாவதாக உலர்த்தும் இரப்பர் அறைக்குள் செல்லுகின்றன. அறையின் வெளிப் பக்கத்திலே இருக்கும் அடுப்பில், விறகையும், புகையிலை யையும் சேர்த்து எரிக்கின்றனர். இப்புகையின் புகையால், அறையின் உள்ளிருக்கும், இரப்பர் மூக்குப்பொடி நிறமாக மாறுகிறதுமல்லாமல், நாற்றமும் நீங்குகிறது. வெண்ணிற மாக இருந்த இரப்பர் நிறம் மாறுகிறது. புகைப்பிடித்து பதமானபின் வெளியில். ஆர வைத்து, எல்லாவற்றையும் சேர்த்து கொச்சியிலிருக்கும் "இரப்பர் தொழிற்சாலைக்கு" அனுப்புகிறார்கள். அங்கு பல பொருள்கள் தயாரா கின்றன.

இரப்பர் வெய்யிலில் உருகாமலும், மழையில் சுருங்காமலுமிருக்க ஓர் அமெரிக்கர் நூதன முறையைக் கண்டார். இரப்பரோடு கந்தகத்தைச் சேர்ந்தால் அது என்றும், ஒரே நிலையில் உறுதியோடிருக்கும் என்பதே. இவைகள்தான் இன்று வண்டிகளுக்கு உபயோகப்படுகின்றன. எந்த வஸ்த்துவுக்குமில்லாததோர் தன்மை இரப்பருக்கு உண்டு. அதுதான் இழுத்தால் நீளவும், விட்டால் சுருங்கவுமுள்ள தன்மை.

தென்னாட்டு மக்களுக்கு வசதி இருந்தால் இம்மரங்களையும், இத்தொழிலையும் காணத் தவற வேண்டாம்.

# பொன்னுத் தட்டான்

சீதோஷ்ண நிலை மாறும்போது, வெளிநாடுகளிலிருந்தும், இமயம், விந்திய மலைகளிலிருந்தும் நீர்ப் பறவைகள் மட்டுமே மதுராந்தகத்திற்கு அருகிலுள்ள வேடன்தாங்கலுக்கு வருகின்றன. ஆனால், மணல் பறவைகளும், புதர்களிலும், மரங்களிலும் இரவில் வாழும் பறவைகளும், தானியங்களைத் தின்னும் பறவைகளும் வருவதில்லை. இது ஏன் என்று வேடன்தாங்கலைப் பற்றி ஆராய்ச்சி செய்து அகில இந்தியாவிலுமே முதல் முறையாக 10-2-56-ல் மித்திரன் ஞாயிறு மலரில் அது குறித்துக் கட்டுரை எழுதிய போதே நான் யோசித்ததுண்டு. அதன்பின் அதுபற்றிப் பல மாதங்கள் சிந்தனை செய்து கிராமவாசிகள் பலரை கேட்டும் பார்த்தேன். பலர் பலவிதமாகக் கூறினார்கள். அவர்களின் கூற்றுக்கள் ஒன்றுக்கொன்று முரணாயிருந்த போதிலும் ஒன்றுமட்டும் உறுதியாகத் தெரிந்தது. இவ்விஷயமாக ஆராய்ச்சி செய்வதாயின் மழைக்காலம்தான் ஏற்றது என்பதுதான் அது. அதன் பேரில் கடந்த மூன்று நான்கு ஆண்டு காலமாக முதல் மழை பெய்யத் துவங்கியதுமே சென்னையில் தொடங்கிக் கடற்கரையோரமாசப் பிரயாணம் செய்யலானேன்; கடலிலிருந்து சுமார் பத்து மைல் தூரத்துக்குள் உள்ள பல சோலைகள், காடுகளைப் பரிசீலிக்கலானேன். இந்த வருஷம் தரங்கம்பாடி முதல்

ஏறைக்குறைய தனுஷ்கோடி வரையில் சென்றேன். அப்போது அப்பகுதியில் கடற்கரையிலிருந்து சுமார் பத்து மைலுக்குள் உள்ள சிறுசிறு சோலைகளில் 'காச்சலாக் குருவிகள்' அல்லது 'பொன்னுத் தட்டான் குருவிகள்' என்று கூறப்படும் பல ஆயிரக்கணக்கான பறவைகள் இரவு காலங்களில் வந்துறைவதைக் கண்டேன்.

## உடலும், அமைப்பும்

இப்பறவைகளின் தேகங்களில் ஒன்பது வர்ணங்கள் இருக்கின்றன. அலகும், தேக அமைப்பும் மைனுக் குருவிகளைப் போன்றே உள்ளன. மணிக்கு சுமார் முன்னூறு மைல் வேகத்தில் இவற்றினுல் பறக்கக்கூடும் என்றும், ஒரே இரவில் சுமார் ஆயிரம் மைல்களுக்குக் குறையாமல் பறக்கும் என்றும் கூறுகிருர்கள். இரவு சுமார் இரண்டாம் ஜாமத்திற்குப் பிறகுதான் 'பட பட' என்னும் ஓசையுடன் இவை பறந்து வந்து, மரங்களில் உட்காருகின்றனவென்றும், விடியற்காலையில் நான்கு மணிச் சுமாருக்கு குயிலைப் போல் அழகான குரலில் கூவுகின்றனவென்றும், ஆனல் அதைப் பாட்டில் சேர்க்க முடியாது என்றும் அந்தச் சோலைகளில் வசிக்கும் மக்களால் கூறப்படுகிறது.

இவற்றில் பெண் பறவை உருவத்தில் பெரியதாகவும், ஆண் உருவத்தில் சிறியதாகவும் இருப்பதைக் கவனித்தேன். தேக வர்ணத்தில் ஆணுக்கும் பெண்ணுக்கும் யாதொரு வித்தியாசமும் கிடையாது. இப்பறவைகள் கிளைக்குக்கிளையும், தரையிலும், தத்தித்தத்தித் தாவுகின்றன. பகலில் இவை அவ்வளவாகப் பறப்பதில்லை. அப்போது மணலைத் தோண்டி அதில் உட்கார்ந்திருக்கின்றன. அல்லது செடிகளின் நிழலில் மண்ணில் உட்கார்ந்திருக்கின்றன. பொதுவாக, மணலிருக்கும் இடங்களிலேயே இவை இன்பம் கொண்டாடுகின்றன.

செம்மறியாடுகளைப்போல் கூட்டம்கூட்டமாகச் சேர்ந்து வாழும் பழக்கமுடையவை இவை. ஆடுகளைப் போலவே இவற்றிலும் ஒன்றுமுதலில் பறந்தால் எல்லாப் பறவைகளும் அதைப் பின் தொடர்ந்து பறக்க ஆரம்பிக்கின்றன. ஒன்று சண்டையில் இறங்கினால் தீர்ந்தது! ஏகக் கூச்சலுடன் எல்லாமே சண்டையிடத் தொடங்கிவிடுகின்றன. இப்பழக்கமிருப்பதால் தான் வலையிலும் கூட்டமாகச் சிக்கிக்கொள்கின்றன. புறுவைப் போல் பயந்த சுபாவமுடயவையாயினும் அதைவிட இப்பறவைகளின் கால்கள், சற்று நீண்டு இருக்கின்றன. இறக்கைகளும் சற்று நீளமாக உள்ளன. இவற்றின் மேலிருக்கும் வர்ணங்களோ கிளிப் பச்சையைப் போல் அழுத்தமாக இருக்கின்றன.

பிள்ளைப் பூச்சி, மண்புழு, நாகைப் பூச்சி, சிறுசிறு வெட்டுக்கிளிகள், இலைப் புழுக்கள், முதலியவைகளைத்தான் இப்பறவைகள் தின்கின்றன. இறச்சியை நன்றாகக் கொத்திப் பொடி செய்து கொடுத்தால் உண்ணுகின்றன. ஆகவே, சாகபட்சிணிகளைப் போல் இவை தண்ணீரை அதிகமாகக் குடிப்பதில்லை.

### எங்கிருந்து வருகின்றன?

இப்பறவைகள் மலைப் பகுதிகளிலிருந்து வருவதாகக் கூறப்படுகிறது. அப்பகுதிகளில் இடி, மழை, மின்னல் அதிகமாக இருக்கும் சமயத்தில் அவற்றினால் கிலியடைந்து இப்பறவைகள் இரவுக்கிரவாகப் பறந்து வந்து மரங்களில் தஞ்சமடைகின்றனவென்றும், பொங்கலுக்கு மூன்று வாரங்களுக்கு முன் இவை பறந்துபோய் விடுவதாயும், அதற்குப்பின் அப்பகுதிகளில் இவற்றைக் காணமுடியாதென்றும் அங்கு தலைமுறை தலைமுறையாக வாழும் கிராமவாசிகள் கூறுகிறார்கள். பொதுவாக இப்பறவைகளை

நாகூரிலிருந்து நாகப்பட்டினம் வழியாக வேதாரண்யம் போகும் பஸ் மார்க்கத்திலிருக்கும் அடர்ந்த சோலைகளி லும், தோப்புகளிலும், காடுகளிலும் அதிகமாகக் காண லாம்.

சாதாரணமாய் அக்டோபர் மாதம் முதல் டிசம்பர் மாதக் கடைசி வரையில் இப்பறவைகள் அப்பகுதிகளில் தங்குகின்றன. அந்தச் சமயத்தில் இவை நூற்றுக்கணக்கில் பிடிக்கப்பட்டு விற்பனை செய்யப்படுகின்றன.

நம்நாட்டு மலைப் பகுதிகளிலிருந்துதான் இவை வருகின்றனவா? பின்னர் எங்கு போய்விடுகின்றன?—இவற்றைஅறியவேண்டுமானால்,அனுபவமுள்ள ஆராய்ச்சிக் குழுவொன்று அவசியம். அக்குழு இப்பறவைகளின் கால் களில் வருமிடமும், காலமும், 'இந்தியா' என்றும் எழுதிய இலேசான தகடுகளைக் கட்டவேண்டும். பின்னர் இத்தகடுகளை யாராவது கண்டெடுத்தால் எப்பகுதியில் என்ன தேதியில் கிடைத்தது என்பதை அந்தக் குழுவுக்கு அறிவிக்கச் செய்யவேண்டும். இப்பறவைகளில் சிலவற் றைப் பிடித்துச் சென்னை மிருகக் காட்சி சாலையில் வளர்த் தும் ஆராய்ச்சி செய்யலாம். (நானே இவற்றில் நான்கு பறவைகளைச் சென்னைக்குக் கொண்டுவந்து, ஒரு பறவையை என் நண்பரிடம் சேர்த்துள்ளேன். இன்றும் அவை அங்கு வளர்ந்து வருகின்றது.) இவ்வாறு ஏற்பாடுகள் செய்தால் இன்னும் சில ஆண்டுகளில் பறவைகளைப்பற்றிய பல ரசமான செய்திகளை இந்தியா மட்டுமல்லாமல், மற்ற நாடு களும் அறிந்து பயனடைய ஏதுவாகும்.

# கசங்குக் கூடை

ஆதிவாசிகளிடையே எவ்வளவோ குடிசைத்தொழில்கள் மலிந்து கிடக்கின்றன. அவற்றிலொன்று கூடை கட்டும் தொழில்.

பிரம்புக் கூடை, மூங்கிற்கூடை, ஓலைக்கூடை, மரக்கூடை, கசங்குக்கூடை, பிளாஸ்டிக் கூடை எனப் பற்பல வகையான கூடைகள் தற்காலத்தில் புழக்கத்தில் இருக்கின்றன. ஆனால், ஆதி காலத்தில் பெரும்பாலான இடங்களில் மூங்கிற் குழாய்களைத்தான் கூடைகளாகஉபயோகப்படுத்தி வந்தார்கள். மூங்கிற்காடுகள் இல்லாத இடங்களில் பாக்கு மட்டைகளையும், வாழைப் பட்டைகளையும், பெரிய இலைகளையும் கூடையைப்போல் மடித்து உபயோகப்படுத்தி வந்தார்கள். அதற்குப் பிறகு தையற்காரப் பறவைகள் கூடுகளை அமைக்கக் காட்டு நாரைக்கொண்டு இலைகளை மடித்துத் தைப்பதைக் கண்ட ஆதிமனிதர்கள் தாங்களும் தோல்களையும், பட்டைகளையும், மட்டைகளையும் இணைத்துத் தைக்க ஆரம்பித்தார்கள். பிறகு பனை மரங்கள் உள்ள நாடுகளில் பனை ஓலையை வெட்டித் தையற்காரப் பறவையைப்போல் மடித்து நாரால் தைத்து, அதன் உள்ளே சாமான்களைப் போட்டு வைக்க ஆரம்பித்தார்கள்.

இவ்விதமான பல முயற்சிகளுக்குப் பிறகுதான் இதர கூடைகள் படிப்படியாக வளர்ந்தன. அங்ஙனம் வளர்ந்த

பல கூடைகளில் கசங்குக் கூடையும் ஒன்றாகும். இதைச் சிலர் ஈச்சங்கூடை என்றும் கூறுவர்.

கசங்குக் கூடை செய்கிறவர்கள், ஈச்ச மரத்திலிருந்து முழு ஓலையை வெட்டுவார்கள். பிறகு அதன் நடுக்கொம்பின் பக்கவாட்டத்திலிருக்கும் ஓலைகளை அறிவாளால் தரித்து விடுவார்கள். பக்க ஓலைகள் நீங்கிய நடுக்குச்சியைக் 'கசங்கு' என்பர். அந்தக் கசங்கைக் கூடை செய்ய வேண்டிய அளவாக அறிவாளால் தட்டை தட்டையாகக் கிழித்துக் கொள்ளுகின்றனர். கிழித்த கசங்கில் கொஞ்சம் தண்ணீர் தெளித்து வாட்டமாக இருக்கும்படிச் செய்து கொள்ளுகின்றனர்.

பின்னுவதற்கு வேண்டிய பதம் வந்தபின் கூடையோ, தொட்டிலோ, மற்றப் பொருள்களோ எதை வேண்டுமாயினும் பாய் பின்னுவதைப்போல் பின்ன, தங்கள் கால், கைகளை உபயோகப்படுத்திக் கொள்ளுகின்றனர். எந்தப் பொருள்களாகப் பின்னினாலும், முடிவில் முடிச்சுப்போடாமலும், கட்டாமலும் உறுதியாகப்பக்கவாட்டத்தில்செருகி விடுகின்றனர். கூடையில் தண்ணீர் படப்பட அது மேலும் மேலும் உறுதியாகிறது.

இவ்வளவு சிரமத்துடன் சேகரித்துச் செய்த கூடையை மற்றவர்களுக்கு இவர்கள் மிகவும் மலிவான விலையில் விற்றுவிடுகின்றனர். கூடைகள், பலவிதத் தொழிற்சாலைகள், நகராண்மைக் கழகங்கள், அணைக்கட்டுகள் முதலிய இடங்களில் மண்ணையும், ஜல்லியையும் அள்ளுவதற்கு உபயோகப்படுகின்றன.

# மொசைக் ஓடுகளின் வரலாறு

உலகம் இப்பொழுது நாகரீகத்திலும், விஞ்ஞானத்திலும் பெருமளவு முன்னேறியிருக்கிறது. சந்திரனுக்கு ராக்கெட்டில் மனிதனை வைத்து அனுப்பும் அளவிற்கு மக்கள் விஞ்ஞானத்துறையில் வளர்ந்திருக்கிறார்கள்.

அதைப் போல்தான் நாடும் நாகரீகத்தில் ஒன்றையொன்று போட்டி போடுகின்றது. காலத்திற்கு ஏற்றபடி நடை, உடை, பாவனை முதலியன எல்லாம் மாறுபடுகின்றன. வான் முட்டும் மாளிகைகள் எழுப்பப்பட்டிருக்கின்றன.

முதன் முதலில் ஆதி மனிதர்கள் தங்களைக் கொளுத்தும் வெயில், குளிர்விக்கும் மழை, நடுக்கும் குளிர் முதலியவற்றிலிருந்து காப்பாற்றிக் கொள்ளச் சிங்கம், புலி வசிக்கும் குகைகளைப் போல் பாதுகாப்பு அளிக்கவல்ல குகைகளைக் கண்டறிந்து குடி புகுந்தார்கள்.

அதன் பின் இலைகளைக்கொண்டு கூடாரம் அமைத்தார்கள். அவைகளைவிடத் தோல் இன்னும் சிறந்ததாக இருக்குமென்பதை உணர்ந்து, மிருகங்களின் மாமிசத்தை உண்டுவிட்டு அவைகளின் மேல் தோலைக்கொண்டு கூடாரம் அமைத்து வாழ்ந்தார்கள்.

சிறிது காலம் கழித்துக் கொம்புகளைக் குறுக்கும், நெடுக்கும் கட்டி அவற்றின் மேல் தென்னங்கீற்று, பனை

ஓலை முதலியவற்றைப் பரப்பிக் குடிசைகளை அமைத்தார்கள். குடிசைகளுக்கு மண் சுவர் எழுப்பினார்கள். பின் கற்களைக் கண்டறிந்தார்கள். அவைகளைக்கொண்டு சுவரைக் கட்டினார்கள். கற்கள் கண்டறிந்த பின் ஓடுகளும் வழக்கத்தில் வந்தன. அப்புறம் சுண்ணாம்பு, காரை, சிமெண்ட் இவை தோன்றின.

சுட்ட ஓடும், சுட்ட செங்கற்களும், சிமெண்ட்டும் கொண்டு நல்ல அமைப்புடன் வீடுகள் கட்டப்பட்டன. அதன்பின் 'கான்கிரீட்' கண்டு பிடிக்கப்பட்டது.

இப்பொழுது கட்டடக்கலை தலைசிறந்து விளங்குகின்றது. எண்ண முடியாத பல வண்ணங்களில், விதங்களில், மிகமிக உயரமாகக் கட்டடங்கள் உறுதியாக நின்று பெருமையளிக்கின்றது.

மேலை நாட்டில் அறுபது மாடிகளும், எழுபது மாடிகளும் கொண்ட கட்டடங்கள் ஏராளம்! ஏராளம்!! நமது சென்னையில் பதினான்கு மாடிகளைக்கொண்டு அழகாக மவுண்ட்ரோடிற்கே ஒரு தனிச் சிறப்பைத் தந்துகொண்டு இருக்கிறது ஆயுள் இன்ஷூரன்ஸ் கார்பொரேஷன் கட்டடம்.

கட்டடக்கலை வளர்ச்சியடையத் தொடங்கியவுடன் மக்கள் தரைக் கலையிலும் கவனம் செலுத்த ஆரம்பித்தார்கள்.

மண் தரையில் அழகாகச் சாணம் பூசி வைத்துத் தரையை அமைத்தனர் முதலில். பின் சிமெண்ட் பூசினார்கள். அதில் பல சித்திர வேலைப்பாடுகள் செய்தனர். பின் காவி (செம்மண்) முதலிய வண்ணங்களைக் குழைத்துத் தரையைப் பல வண்ணங்களால் அழகுற அமைத்தார்கள்.

பீங்கான் கண்டு பிடிக்கப்பட்ட பின் பீங்கானில் பூ வேலைப்பாடுகள் செய்து அதைத் தரையில் புதைத்து அழகு படுத்தினார்கள்.

பணவசதி கொண்டவர்கள் சலவைக் கற்களை வாங்கித் தரையை அமைத்தார்கள். சலவைக் கற்கள் தள வரிசை பார்ப்பதற்கு அழகாகவும், வழ வழப்பாகவும் இருந் தாலும் அதனை எல்லோராலும் அமைத்து மகிழ முடி யாது.

காரணம்—

பணம்தான்!

எனவே, 'அதைவிடச் சிக்கனமாகவும், அதைப் போல் அழகு தருவதாகவும் வேறு ஏதாவது இருக்கிறதா?' என்று கண்டறியும் ஆராய்ச்சியில் இறங்கினார்கள்.

அதன் விளைவாக வந்ததுதான் மொசைக் ஓடுகள் இது எப்படிக் கண்டு பிடிக்கப்பட்டது? எதிலிருந்து. வந்தது?' என்பதை இனி பார்ப்போம்.

இத்தாலி தேசம் ஒரு மலைப் பிரதேசம். அங்குப் பெரும்பான்மையான இடம் மலையும், பாறையுமாக இருக் கும்.

அங்குதான் சலவைக் கற்பாறைகள் அதிகம். கண்ணைப் பறிக்கும் வெள்ளைச் சலவைக் கற்களும், பச்சைக் கற்களும், நீலக் கற்களும், கறுப்புக் கற்களும், இன்னும் பல வண்ணக் கற்களும் அங்கு அபரிமிதமாக இருந்தன.

பயனற்றுக்கிடந்த பாறைகளைப் பயனுள்ளதாக ஆக்குவதில் ஆராய்ச்சியாளர்கள் தம் கருத்தைச் செலுத்தி னார்கள்.

தும்பைப் பூ போன்ற வெண்மை நிறப் பாறைகளை வெட்டியெடுத்துச் சிலைகள் செய்ய ஆரம்பித்தார்கள்; சிற்பங்கள் செதுக்க முற்பட்டார்கள்.

சிற்பக்கலை செழித்தோங்கியது. பலப்பல வண்ணங் களில்—பாறைகளின் பலவித கலர்களில் சிற்பங்கள் செதுக்கப்பட்டன.

சலவைக் கல்லின் தன்மையை அறிந்த பல்வேறு நாட்டினரும், அதன்பால் நாட்டம் கொண்டனர். தங்கள் தங்கள் நாட்டில் சலவைக் கல்லால் செய்த பொருள்களைச் சேர்க்க விருப்பங் கொண்டனர்.

எனவே கேட்பாரற்று மலையாக, பாறையாக இருந்த சலவைக் கல், பல்வேறு நாட்டினர் விரும்பும் ஒரு புதிய பொருளாயிற்று!

இந்தியாவை அப்பொழுது மொகலாயப் பேரரசு ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருந்தது.

தன் ஆசைநாயகி மும்தாஜின் வேண்டுகோளின்படி ஓர் அழகு மஹாலை எழுப்ப நினைத்த ஷாஜஹான் உள்ளத்தில், இந்தச் சலவைக் கற்களின் எண்ணம்தான் எழுந்தது. உடனே அங்கிருந்து சலவைக் கற்பாறைகள் கொண்டு வர ஏற்பாடாகியது. மஹாலும் எழுந்தது.

அந்தச் சலவைக் கற்களால்தான் இன்று உலக அதிசயங்களில் ஒன்ருகச் சிறந்து விளங்கும் ஆக்ராவில் உள்ள 'தாஜ்மஹால், கட்டப்பட்டது.

சலவைக் கற்பாறைகளை எடுத்துச் சிலைகள் செதுக்கப் பட்ட பின் அவற்றின் கீழ்ச் சிறுசிறு சலவைக் கற்கள் விழுந்தன. இப்பொழுது இருக்கும் கருங்கல் ஜல்லிபோன்று அவைகள் இருந்தன. அவைகள் உபயோகமற்றுப் போராகக் குவிந்தன.

அவற்றைப் பயனுள்ளதாக்க முற்பட்டார்கள். எந்த வழியில் உபயோகப் படுத்துவது என்று அவர்களுக்குப் புலனாகவில்லை.

முடிவாக அவர்களுக்கு ஓர் எண்ணம் உதித்தது. அவர்கள் சாலையில் கருங்கல் துண்டுகளைப் போடுவதற்குப் பதில் இந்தச் சலவைக் கற்றுண்டுகளைச் சேர்த்துச் சாலையை அமைத்தார்கள். அந்த வழியாக அது உபயோகப்படுத்தப் பட்டது.

நாளடைவில் சலவைக் கற்றாள்கள் சேர்ந்து போடப் பட்ட சாலையில் ஒரு கவர்ச்சி காணப்பட்டது!

ஆம்! வெண்மை நிறச் சலவைக் கற்றாள்கள் போக்கு வரத்தினால், தேய்ந்து மட்டமாகச் சாலையில் வெள்ளை வெள்ளை வட்டங்களாக—புள்ளிகளாக அங்குமிங்கும் பார்ப்பதற்கு ஒருவிதக் கவர்ச்சியுடன் இருந்தது.

இதைக் கண்ட எல்லோரும் மகிழ்ச்சியில் திளைத் தனர்.

அதன்பின் பெரிய துண்டுகளைச் சாலையில் போடுவ தற்குப் பதிலாகச் சிறுசிறு பொடித்தூள்களைக் கலந்து போட்டார்கள். அதை அவர்கள் கைகளாலேயே தேய்த்து எப்படி இருக்கிறது என்றும் பார்த்தார்கள்.

பெரிய கட்டிகளைக் காட்டிலும், பொடித் தூள்களின் பரவல் 'பளிச்' சென்றும், அதைவிட அழகாகவும் காணப் பட்டது!

அவர்களுக்குப் பாறை சிற்பம் செய்யவும், அப்போது விழும் தூள்கள் இப்படித் தரையில் போடுவதற்கும் பயன் படுவது மகிழ்வைத் தந்தது.

சாலையில் போடக் கண்டறிந்த அந்த சலவைத் தூள் கலவையை வீடுகளிலும், கட்டிடங்களிலும், போட்டுக் கைகளினால் தேய்த்து அழகு படுத்தினார்கள்.



இப்படிப் பல வண்ணங்களில் கிடைக்கும் சலவைக் கற்றாள்களைக் கலந்து மேலும் அழகழகான தரையை அமைத்தார்கள்.

கருங்கற்களுக்குப் பதிலாக இந்தப் பலவண்ணச் சலவைக் கற்றாள்களைக் கலந்த கலவைதான் டெராசோ (Terrazo) கலவையாகும். கலைடாஸ்கோப் (Kaleidooscope) (வெகுவர்ண தரிசினி அல்லது சித்திரக்குழல்) வழியே பல வித வண்ணங்களில் சித்திரங்களைக் காண்பதை போல் தரை காணப்பட்டது.

மக்களுக்கு அதன்மீது நாட்டம் விழுந்தது. எல்லோரும் அதை உபயோகிக்க ஆரம்பித்தார்கள்.

பிறகு 'அந்தச் சலவைக் கற்றாள்கள் கொண்ட கலவையைச் சிறுசிறு ஓடுகளாகச் செய்து தரையில் புதைத்தால் என்ன?' என்று எண்ணினார்கள். அது நல்லதாகப் பட்டது. உடனே அதைச் சிறுசிறு ஓடுகளாகச் செய்தார்கள்.

ஓடு கெட்டியாக இருக்க அந்தக் கலவையை அச்சில் ஊற்றி அதன்மேல் நல்ல பாரம் வைத்து அழுத்தினார்கள். அது அவர்கள் நினைத்தபடியே நன்றாகவும், அழகாகவும் வந்தது.

உடனே அதை அழுத்துவதற்கு உண்டான இயந்திரத்தைக் கண்டுபிடிக்க முயன்றார்கள்.

'கைப் பிரஸ் (Hand Press) கண்டறிந்தார்கள். அதன் பிறகு 'ஹைட்ராலிக் பிரஸ்' (Hydraulic Press) அதாவது நீர் சக்தியால் அழுத்தும் இயந்திரம் கண்டறிந்தார்கள். அதை உபயோகித்து ஓடுகள் செய்தார்கள். அதனால் ஓடுகள் அதிக வலுப்பெற்றன.

கற்களின் மேற்பரப்பை வழவழவென்று தேய்க்கச் சாணைக் கற்களைக் கண்டறிந்தார்கள். அதனால் மேற் பரப்பை நன்றாகத் தேய்த்துக் கண்ணாடி போன்று 'பளபள' வென்று வெகு வர்ண தரிசினியில் பார்க்கப்படும் பூக்களின் காட்சி போல் தரையை அமைத்தார்கள்.

சலவைக் கற்றூள்களோடு, வெள்ளைச் சிமெண்ட், கலர்ப் பொடிகள் எல்லாம் வேண்டிய அளவு கலந்து கற்கள் செய்தார்கள். அவை மிக அழகான வண்ணமும், புதுவித அழகும் தந்தன!

இப்படிப் படிப்படியே இந்த மொசைக் ஓடுகள் (Mosaic Tiles) வளர்ச்சி பெற்றன. இம்முறையை முதலில் கண்டறிந்த பெருமை இத்தாலி தேசத்தைத்தான் சாரும்.

இது எப்படி இந்தியாவில் வந்தது என்பதை இனி ஆராய்வோம்.

இந்தியர்களுக்கு இந்த வண்ணத் தரையில் ஓர் எண்ணம் விழுந்தது. இத்தாலியிலிருந்து கைதேர்ந்த— திறமை மிக்க ஒருவரைக் கொண்டு முதன் முதலில் சுமார் அறுபது ஆண்டுகளுக்கு முன்பு பம்பாயில் இந்த மொசைக் தொழில் ஆரம்பிக்கப்பட்டது. அதன்பின் சென்னை, கல்கத்தா முதலிய பல இடங்களிலும் ஆரம்பிக்கப் பட்டது.

இத்தாலியில் கராரா, வெரோனா ஆகிய இரண்டு இடங் களில் கிடைக்கும் சலவைக் கற்கள் தாம் உலகிலேயே சிறந்த சலவைக் கற்கள். அவைகள் தாம் அழுத்தமும், உறுதியும், பளபளப்பும் கொண்டிருக்கின்றன.

நமது அரசாங்கம் நம்நாட்டுப் பொருள்களை ஆதரித்து, அவைகளை உபயோகித்து, அந்நியச் செலாவணியைக் குறைக்க இறக்குமதியைச் சில பொருள்களுக்கு ரத்து

செய்தார்கள். அவைகளில் ஒன்ருகச் சிக்கிக் கொண்டது இந்தச் சலவைக் கற்கள்.

எனவே இந்தியாவில் அது எங்கு கிடைக்கிறது என்று ஆராயத் தொடங்கினுர்கள்.

ராஜஸ்தானில் சலவைக் கற்பாறைகள் தென்பட்டன. அவைகள் மற்ற இடங்களில் இருந்ததைப் போல் மட்டமாக இல்லாமல் உறுதியாகவும், கிரிஸ்டல் (பளிங்கு) உருவத்திலும் (crystal form) இருந்தன.

ஆனல் ராஜஸ்தானில் உள்ள மக்ராஞ ஊர்ச் சலவைக் கல் இத்தாலி தேசத்தில் கராரா, வெரோஞ ஆகிய இடங்களில் கிடைத்த பால் போன்ற வெள்ளைச் சலவைக்கல் (milkywhite) போன்று இல்லை. ஒருவித பழுப்பு நிறத்துடன் எண்ணெய் பூசியதுபோல் இருந்தது.

இதற்குக் காரணம் ராஜஸ்தான் சலவைக் கற்களுக்கு இன்னும் வயதாகவில்லை. ஆம்! இத்தாலி தேச சலவைக் கற்கள் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிலிருந்து மலையாக இருப்பதால் பால்போன்று கண்களுக்கு இன்பம் தரும் தூய வெள்ளை நிறத்துடன் காட்சியளிக்கின்றன. நமது நாட்டில் ராஜஸ்தான் பாறைகள் தரத்தில் எல்லாவகையிலும் அவற்றிற்கு ஈடாக இருந்தாலும் அவைபோன்ற வெண்மைத் தன்மையைப் பெறவில்லை. அதற்குக் காரணம் இது தோன்றி இன்னும் பல்லாயிரம் ஆண்டுகள் ஆகவில்லை. இது ஆராய்ச்சியாளரின் கருத்து.

அதன்பின் ஆந்திர தேசத்தில் சில இடங்களில் இந்தச் சலவைக் கற்பாறை இருப்பதைக் கண்டறிந்தார்கள். இதுவும் ராஜஸ்தான் மார்பிளைப்போலத்தான் இருந்தது. எனவே இதையும் உபயோகிக்கத் தொடங்கினுர்கள்.

வெள்ளை நிறப் பாறைகளோடு ஆந்திராவில் கறுப்பு நிறப் பாறைகளும் அபரிமிதமாகக் கிடைத்தன.

• உலகிலேயே கறுப்புச் சலவைக் கற்களுக்கு பெல்ஜியம் தான் பெயர் பெற்றது. அதற்கு ஈடாக ஆந்திராவில் கறுப் புக் கற்கள் கிடைக்கின்றன. இந்தியா முழுதுக்கும் அங்கிருந்துதான் கறுப்புச் சலவைக் கற்கள் செல்லு கின்றன.

வண்ணச் சலவைக் கற்கள் பலவும் இன்னும் இந்தியா வில் கண்டறியப்படவில்லை. ஆராய்ச்சியாளர்கள் கண்டறிய முயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள்.

அதன்பின் 'மாக்னிசைட்' பாறைகளைச் சலவைக் கற்களின் தூள்போல் செய்து உபயோகித்தால் என்ன?' என்ற எண்ணம் எழுந்தது. எனவே அதை உபயோகிக்க முற்பட்டார்கள்.

மாக்னிசைட் (Magnesite) பாறைத்தூள் பால் போன்று கண்ணைப் பறிக்கும் வெண்மை நிறம் கொண்ட தாக இருந்தது.

ஆனால் அதுமிகவும் மிருதுவான பொருளாய் இருந்தது. அதனால் அது தண்ணீரை இழுத்துக்கொண்டு காய்வதற்கு வெகுநேரம் ஆகிறது. எனவே அதில் அழுக்கு சேர்கின்றது. ஆகையால் தரை அசுத்தமாகிறது.

ஆனால் சலவைக் கற்றூளில் இந்தக் குறை கிடையாது. ஆனால் வெண்மை நிறத்தில் மாக்னிசைட் தூள் தான் முதல் தரத்தது ஆகும்.

மார்பிலில் (Marble) கால்ஷியம்-கார்பனேட் (Calcium Carbonite) இருக்கிறது. மாக்னிசைட்டில் (Magnesate) மக்னீஷியம் கார்பனேட் (Magnecium Carbonate) இருக் கிறது.

மாக்னிசைட் சிப்ஸை அதன் வெண்மைக்காகச் சிலர் உபயோகப்படுத்துகிறார்கள். ஆனால் மாகாணப் பொதுத்

துறையாளர் பகுதியினரும் (Public Works Department,) மத்திய பொதுத்துறையாளர் பகுதியினரும் (Central Public Works Department), மற்றும் பல கண்ட்ராக்டர்களும் (Contractors), இன்ஜினியர்களும் (Engineers), மார்பிள் சிப்ஸையே அதிகமாக உபயோகிக்கச் சொல்லுகிறார்கள்.

காரணம் சலவைக் கற்றாள் நல்ல மெருகைப் பெற்றுக் கண்ணாடிபோல் மின்னும் ஒருவிதப் பளபளப்பை உடையதாயிருக்கிறது. மாக்னிசைட் கற்றாள் நாளடைவில் சில இடங்களில் பூவைப்போல் கொப்புளமாய் பெரிதாகி மொசைக் ஓட்டின்மேல் வந்து விடுகிறது. எனவே அது அவ்வளவு சிறந்தது அன்று.

இந்த மாக்னிசைட் கற்கள் சேலத்தில் அபரிமிதமாகக் கிடைக்கின்றன.

இந்த மாக்னிசைட் தூளைப் பொடி செய்து வேகவைத்தால் (சுட்டால்) அது சோரல் சிமிண்டாகிறது. (sorel cement). இது மிகமிகச் சீக்கிரமாகப் பொருந்திவிடும். (செட்டாகிவிடும்) எனவே இதை இரும்பு, மரம் முதலியவற்றின்மேல் பூச உபயோகப்படுத்துகிறார்கள்.

இனி இந்த மொசைக்ஓடு எப்படி செய்கிறார்கள் என்று பார்ப்போம்.

சலவைக் கற்களின் சிறுசிறு தூள்களும் மற்றும் சிமெண்ட், வெள்ளை சிமெண்ட், மார்பில் பவுடர், கலர்ப் பொடிகள் முதலியவைகளும்தான் மொசைக் தொழிலின் மூலப்பொருள்கள்.

வண்ணம் பொடியையும், வெள்ளைச் சிமெண்ட்டையும், மார்பில் பவுடரையும் முதலில் சரியான அளவு போட்டு எல்லாவற்றையும் ஒன்றாகச் சேரும்படி தேய்ப்பார்கள். (இப்படித் தேய்ப்பதற்கு இப்பொழுது இயந்

திரமும் கண்டுபிடிக்கப்பட்டு உபயோகத்தில் இருந்துவரு கிறது) அதன்பின் எள்ளைப் போன்ற இருக்கும் சலவை கற்களின் சிறுசிறு தூள்களை, வெள்ளை கறுப்பு ஆகிய இரண்டு தூள்களையும் (அவரவர் விருப்பப்படி வெள்ளை மட்டுமோ, கருப்புமட்டுமோ இல்லை இரண்டும் கலந்தோ உபயோகிக்கலாம்) ஒன்ருகும்படி நன்ருகக் கலந்து, அந்த வண்ணக் கலவையோடு சேர்த்துக் கலப்பார்கள்.

உடனே அது ஓடுகள் தயாரிக்கும் இடத்திற்குக் கொண்டு செல்லப்படும். அங்கே ஹைடிராலிக் பிரஸ் (Hydralic Press) மூலம் மொசைக் ஓடுகள் செய்யப்படு கின்றன.

மொசைக் ஓடு செய்யக் கொண்டுவந்திருக்கும் பொடி யில் தேவையான அளவு தண்ணீர் ஊற்றிச் சேறுபோல் குழைப்பார்கள்.

அந்தச் சேற்றை மொசைக் ஓடு செய்ய இருக்கும் அச்சில் ஒரு கரண்டி எடுத்துப் போடுகிருர்கள். அதை அச்சில் நான்கு பக்கங்களிலும், நடுவிலும் சமமாக இருக் கும்படி ஒரு தகட்டில் பரப்புவார்கள். அதன்பின் அச்சை அப்படியும், இப்படியுமாக ஆட்டுவார்கள். அதனுல் அந்தக் கலவையில் உள்ள காற்று வெளியேறி விடுகிறது. பின் அதன்மேல் சிமெண்ட்டும், சன்னமான பொடி மணலும் கலந்த உலர்ந்த கலவை (Dry Mixture) தூவப்படும். அது தண்ணீரை உறிஞ்சுவதோடு கலவையைக் கெட்டிப்படுத்து கிறது. அதன்மேல் சிமெண்ட்டும், பெருமணலும்கொண்ட ஈரக் கலவையைப் (Wet Mixture) போடுவார்கள். அது தான் மொசைக் ஓட்டின் அடிப்புறமாக அமையும். அந்த ஈரக் கலவையை ஒரு தகட்டினுல் சமமாக ஆக்கி அதிகப்படி யாய் உள்ளதை அகற்றி விடுவார்கள்.

பிறகு அதன்மேல் அச்சின் மேல் பாதித் தட்டை Topplate of the Mould) தூக்கி வைத்துப் பிரஸ்ஸில் கொடுப்பார்கள்.

அச்சை மேலிருந்து ஒரு வளையம் அழுத்தி பிடித்துக் கொள்ளும். ஹைடிராலிக் பம்ப் ஓடிக்கொண்டே இருக்கும். ஹைடிராலிக் பிரஷர் அடியிலிருந்து சதுர அங்குலத்திற்கு 800 பவுண்டு முதல் 2,000 பவுண்டு வரையுள்ள அழுத்தத்தில் அதை அழுத்துகிறது. எனவே கலவையாக அச்சில் இருந்தது கெட்டியான ஓடாக மாறிவிடுகிறது. அதை ஒரு மரச் சட்டத்தின்மேல் எடுத்து வைத்து மரப்பெட்டியில் அடுக்குவார்கள்.

ஆறு மணிநேரம் ஆனபின் அந்த ஓடுகளைத் தண்ணீர் நிரம்பிய தொட்டிகளில் இறக்கி விடுவார்கள். இந்தத் தொட்டிகளுக்குக் க்யூரிங் டாங்குகள் (Curing Tanks) என்று பெயர். இந்தத் தொட்டிகளில் இருபத்து நான்கு மணி நேரம் இருந்தபின் பெட்டியையும், மரச் சட்டங்களையும் எடுத்துவிட்டு ஓடுகளை மட்டும் தண்ணீரில் வைக்கிறார்கள். இவ்வோடுகள் தொட்டியில் ஒரு வாரம் இருக்கின்றன. இதனால் ஓடுகள் அதிக வலுப்பெறுகின்றன.

பின்னர் அந்த ஓடுகளை எடுத்துச் சுழலும் இயந்திரம் ஒன்றில் வைத்து ஓடுகளின்மேல் உள்ள சிமெண்ட்டைப் போக்குகிறார்கள். அதனால் உள்ளே இருக்கும் கல்மணிகள் 'பளிச்'சென்று தெரியும். அது பார்ப்பதற்கு அழகாய்த் தோன்றும்.

சிமெண்ட்டை அகற்ற உதவும் இயந்திரத்திற்கு பாலிஷிங் அல்லது பிளேனிங் மிஷின் (Polishing or Planing Machine) என்று பெயர்.

ஓடுகள் பாலிஷ் செய்யப்பட்ட பின்னும் தண்ணீர் தெளித்துக்கொண்டே இருப்பார்கள். இதற்கு 'ஸ்ப்ரே க்யூரிங்' (Spray Curing) என்று பெயர். ஓடுகள் உறுதியாகவும், வலுவாகவும் இருக்க இரண்டு வாரம் தண்ணீர்தெளித்துக்கொண்டே இருப்பார்கள். ஆக மூன்று வாரம் இந்த மொசை ஓடுகள் தண்ணீரில் ஊறுகின்றன.

இந்த நிலையில்தான் ஓடுகள் கட்டட வேலை நடக்கும் இடங்களுக்கும் எடுத்துச் செல்லப்படுகின்றன.

அங்கு இத்துறையில் ஆழ்ந்த அனுபவமும் திறமையும் மிக்கவர்களால் இந்த மொசைக் ஓடுகள் அழகாக, ஒழுங்காக, விதவிதமாகத் தரையில் பதிக்கப்பட்டு, பின்னர் பாலிஷிங் இயந்திரத்தால் நன்ருகப் பாலிஷ் செய்யப்பட்டுப் 'பளபள'வென்று கண்களைக் கவரும் வண்ணத் தரையாக மாற்றப் படுகிறது.

மொசைக் ஓட்டில் தரையை அமைப்பதில் பல அனுகூலங்கள் இருக்கின்றன.

முதலாவதாக பகட்டாக இருக்கும். இரண்டாவதாக சுத்தம் செய்ய மிக எளிதாய் இருக்கும். மூன்ருவதாக தரையில் வெடிப்பு ஏற்படாது. நான்காவதாக சிமெண்ட் தரையைப் போல் அடிக்கடி பெயர்த்துப் போட வேண்டியதில்லை. ஐந்தாவதாக சலவைக் கற்களைக்கொண்டு அமைப்பதைவிடக் குறைவான தொகையில் தரையை அமைக்கலாம். ஆருவதாக சிறுசிறு ஓடுகளால் ஆன தரையானதால் தரை மற்ற தரைகளை விட அழுத்தமும், பலமும் கொண்டதாயிருக்கும்.

இத்தொழில் கேட்பதற்கும் பார்ப்பதற்கும் சிறு தொழிலாகத்தான் இருக்கும். ஆனுல் செய்வதற்கு மிகக் கஷ்டமானது.

இந்த மொசைக் தரையை எல்லோருடைய வீட்டிலும் அமைக்கவேண்டும். அதற்கு மொசைக் ஓடுகளின் விலை குறையவேண்டும். ஓடுகளின் விலை குறைய வேண்டுமானால் மூலப் பொருள்களின் விலை குறைய வேண்டும். அது குறைய அரசாங்கம் உதவி புரிய வேண்டும்.

சென்னையில் ஹைட்ராலிக் பிரஸ் வைத்து மொசைக் ஓடுகள் செய்யும் தொழிற்கூடங்கள் பத்து அல்லது பன்னிரண்டு இருக்கின்றன. அவைகளுள் நல்லபடியாகவும், பெயர் பெற்றும் விளங்குவன ஐந்தாறுதாம்.

நான் மொசைத் தொழிலைப் பற்றி ஒரு கட்டுரை எழுத வேண்டும் என்று எண்ணியிருந்தேன்.

எனது இல்லத்தின் அருகிலேயே உள்ள 'மெட்ராஸ் ஆர்ட் புளோர்ஸ்' (Madras Art Floors) கம்பெனியின் நினைவு எனக்கு வந்தது. எனவே அந்தக் கம்பெனியின் பாகஸ்தரும், நிர்வாகஸ்தருமான திரு. ஜி. என். பாலகிருஷ்ணன் அவர்களைச் சந்தித்து அனுமதி கேட்டேன். அவர்களும் மறுக்காமல் அனுமதி தந்தார்கள்.

ஒரு நாள் நீண்ட நேரம் நன்ருகச் சுற்றி பார்த்தேன். அவர்கள் I. S. I. அதாவது இந்தியன் ஸ்டாண்டர்டு இன்ஸ்டிடூஷன் (Indian Standards Institution)முறைகளைப் பின்பற்றி அதன்படியே ஓடுகள் செய்கிருர்கள். முறையோடு செய்யும் ஓடுகள் தரத்தில் குறையுமா என்ன?

தொழிற்கூடத்தை ஆரம்பித்த இரண்டாண்டுகளிலேயே தரைக் கலையில் நல்ல பெயரையும், நன்மதிப்பையும் மாகாணப் பொதுப்பணித் துறையிலும், மத்தியப்பொதுப் பணித் துறையிலும் மற்றும் பல கண்ட்ராக்டர்களிடமும் இன்ஜினியர்களிடமும் 'மெட்ராஸ் ஆர்ட் புளோர்ஸ்' பெற அதன் முறையான தொழில் உற்பத்தியும், ரகத்தில்—தரத்

தில் அதிகக் கவனம் செலுத்துவதும்தான் காரணம் என் பதை என்னால் நன்றாக அறிந்துகொள்ள முடிந்தது.

இந்த மொசைக் தொழில் ஒரு நல்ல தொழில். சிக்கன முறையில் தரையை நன்றாய் அமைக்க அவசியமாய்த் தேவைப்படும் ஒரு தொழில்.

எனவே இதை வளர்க்கவேண்டும். இதனால் வேலை யில்லாத் திண்டாட்டமும் சிறிது ஒழியும். ஆகவே இதற்கு அரசாங்கமும் ஆவன செய்யவேண்டும்.

எனக்கு கம்பெனியைச் சுற்றிப் பார்க்க மறுக்காமல் அனுமதி தந்த திரு. ஜி. என் பாலகிருஷ்ணன் அவர்களுக்கு எனது நன்றி.

# சோழியும் சங்கும் பேசும் கலை

சங்கும், சோழியும் தொன்று தொட்டுத் தமிழ் நாட்டில் பழக்கத்தில் இருந்து வருகின்றன. இந்தியாவின் கடற்கரை ஓரங்களில் வாழும் பரதவர்கள் தங்கள் குடிசையின் உட்சுவரையும் தரையையும், கடற் கிளிஞ்சல்களைக் கொண்டு பலவிதமான கோலங்களால் அழகுபடுத்துவதைக் காணலாம். இப்பழக்கம் நீண்ட காலமாக நிலவி வருவது.

பண்டைக் காலத்தில் சோழியையும், கிளிஞ்சலையும், முட்டையையும் கலந்து சுவர்கள் கட்டினதாக வரலாறு கூறுகிறது. தஞ்சாவூர் மகால், கோல் கும்பா, மதுரை-மீனாட்சி அம்மன் கோயில் முதலியவற்றை நிர்மாணித்த கொத்தர்களை நாம் போற்ற வேண்டும்.

கடலிலிருந்து முத்தும் பவளமும், சங்கும் சோழியையும் எக்காலத்திலிருந்து மக்கள் எடுத்தார்கள் என்று குறிப்பாகத் தெரியாவிட்டாலும், சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, சீனம் முதல் மத்திய தரைக் கடல் வரை, கடலிலிருந்து முத்துக்களும், சங்குகளும், சோழிகளும், பவளங்களும், கிளிஞ்சல்களும் எடுத்தார்கள் என்பது "ப்ளினி" என்பவர் கூறியுள்ளவற்றிலிருந்து தெரிகிறது.

தமிழ் நாட்டில் கொற்கையிலிருந்து இம்மூன்று பொருட்களும் கடல் கடந்து சென்றனவென்பது சங்ககால நூல்களிலிருந்து தெரியக் கிடக்கிறது.

நம் நாட்டுக்கு வந்து சென்ற எகிப்தியர், மூர்கள், அராபியர், வெனிஸ் வர்த்தகர் முதலியவர்கள் இந்நாட்டு முத்து, சோழி, சங்கு முதலியவைகளைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார்கள். இன்னும் இவை போன்ற உதாரணங்கள் எவ்வளவோ எடுத்துக் காட்டலாம்.

இவ்வளவு பழந்தொழில் எக்காரணம் கொண்டோ 1928-ம் ஆண்டு கடைசியாக நின்றுவிட்டது.

இந்தியா சுதந்திரம் அடைந்தபின் 1955-ம் ஆண்டில் தான் இது புத்துயிர் பெற்றது. பேர்போன தூத்துக்குடி கடலில் நமது மந்திரி திரு. எம். பக்தவத்சலம், சங்கு குளித்தலைத் துவங்கி வைத்தார்.

தமிழ்நாட்டில் இப்போது இத்தொழில் மறுமலர்ச்சி பெற்று வருகிறது. வண்ண வண்ண உருவங்களும் ஓவியங்களும் வரையப்பெற்று இவை இல்லங்களை அழகுபடுத்தும் அலங்காரப் பொருள்களாக மிளிர்ந்து வருகின்றன. இந்தியாவுக்கு வரும் வெளிநாட்டினரும் இவற்றைக் கூடை கூடையாக வாங்கிக்கொண்டு போகிறார்கள். கடலோரப் பகுதிகளில் குடிசைத் தொழிலாகப் பரவி வருகிறது.

இத் தொழிலைச் செய்வதற்கு முதற்பணமாக ஐநூறு ரூபாய் இருந்தால் போதும். இத்தொழிலை ஆண்களும் பெண்களும் ஓய்வுநேர வேலையாகச் செய்யலாம். உயர்தரப் பள்ளி மாணவர்களுக்கும் இதைக் கற்றுக்கொடுக்கலாம்.

### செய்யும் விதம்

சங்கு, சோழி, கிளிஞ்சல் முதலியவைகளைக் கடலிலிருந்து கொண்டுவந்து, வெந்நீரில் போட்டு நன்றாகக்

கொதிக்க வைத்து அதிலிருக்கும் இறைச்சிகளைக் கத்தியால் சுரண்டி எடுத்துவிட வேண்டும். அங்ஙனம் நீக்கும்போது மிகுந்த துர்நாற்றம் வீசும். பிறகு அவைகளைச் சுத்தமாகத் துடைத்து சுண்ணும்பு நீரில் கழுவி விடுவது நலம். பின்னர் திராவகத்தைக்கொண்டு சோழி, சங்கு முதலியவைகளின் மேலிருக்கும் ஓட்டை லேசாக நீக்கவேண்டும். நீக்கிய பிறகு பார்த்தால் காப்பி அல்லது கத்தரிப்பூ வர்ணமாகத் தெரியும். அதன் மேல் நமக்கு வேண்டிய சித்திரமோ, எழுத்தோ வரைந்து, வரைந்த மீதிப் பகுதிகளில் திராவகத்தைப் பூசி 'பிளேட்' கொண்டு பூசிய பாகத்தைச் சுரண்டி எடுத்துவிடவேண்டும். எடுத்த பாகம் வெள்ளையாக இருக்கும். அப்படி எடுக்கும்போது நம் பொறுமையை இழந்து விடாமல் இருக்க வேண்டும்.

இத்தொழிலைச் செய்யத் திராவகம், சித்திரம் போடும் பிரஷ்கள், பல வர்ணங்கள், பிளேடுகள், மர எண்ணெய் முதலியவைகள் தேவைப்படுகின்றன. இக்கலைத்தொழிலை எந்தச் சீதோஷ்ண நிலையிலும் தொடங்கலாம்.

# கொட்டாங்கச்சிகளில் கைவண்ணம்

சமீபத்தில் தில்லியில் நடைபெற்ற அணு ஆயுதத் தடுப்பு மகாநாட்டுக்குப் பிரான்சு நாட்டிலிருந்து வந்திருந்த திரு. அப்பே பியரே என்ற பெரியார் சமீபத்தில் சென்னைக் கும் வந்திருந்தார். அவர் தமது வாழ்க்கையை ஏழைகளின் பணிக்கே அர்ப்பணித்தார்.

திரு. அப்பே பியரே சிறிது காலம் பிரான்ஸ் நாட்டுப் பார்லிமெண்ட் அங்கத்தினராக இருந்தார். அவர் குடிசைத் தொழில் பற்றி ஒவ்வொரு நாட்டு மக்களுக்கும் வேண்டி யவை யாவை! என்பதைப்பற்றி ஆராய்வதில் வல்லுநர். இவரைச் சென்னையில் எல்லாரும் சந்தித்துப் பேசும் பொழுது, ஒரு நண்பர், "இந்திய நாட்டுக்கு எப்பணி தேவைப் படுகிறது?" என்று கேட்டார். அதற்கு அவர்,

"இந்திய மக்கள் கோருவதுவேலை! வேலை! அரசாங்கம் சரியான முறையில் கிராம மக்களுக்குச் சிறிய கைத்தொழில் கள் செய்ய வாய்ப்பளித்தால், இந்தியா பெருமளவில் சுபிட்சமடையும். கிராமக் கைத்தொழிலாளருக்குள் சில சிக்கல்களையும், கஷ்டங்களையும் அவர்களையே கேட்டு நீக்க வேண்டும்" என்று கூறினர்.

அதைப் போலவே கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாக இந்தியாவில் ஆதிவாசிகள் வாழும் பல இடங்களுக்குச் சென்றுவரும் நான் அவ்விடங்களில் இருக்கும் குடிசைத் தொழில்களைப் பற்றியும் அக்கறையுடன் விசாரிப்பது உண்டு! அத்தகைய பிரயாணத்தில் ஒருமுறை எம். அப்பளாச்சாரியலு என்ற ஆந்திரரைச் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது.

இவர் செய்யும் குடிசைத் தொழில் முற்றிலும் பிரத்தியேகமானது. உபயோகமற்ற கொட்டாங்கச்சிகளிலும் விளாங்காய் ஓடுகளிலும் இவர் காட்டும் கைவண்ணம் அற்புதத்திலும் அற்புதம். இந்த ஓடுகளுடன் இவருக்கு வேண்டுவது மூங்கில், மற்றும் காட்டிலே வளரும் 'பால மரம்' இதற்கு "வேப்பாலை மரம்" என்றும் பெயர். இவற்றைக்கொண்டு விதம் விதமான விளக்கு ஸ்டாண்டுகள், பவுடர் டப்பிகள். ஜாடிகள், தாம்பூலத் தட்டுகள் செய்கிறார்.

இக்கலை முதன்முதலில் ஆந்திரப் பிரதேசத்தில் தான் நடைபெற்று வந்ததாம். இவருடைய பாட்டனார் மூலம் சுமார் நூற்றைம்பது குடும்பங்கள் இந்தத் தொழிலைக் கற்றுக்கொண்டு பிழைப்பு நடத்துகிறார்களாம்.

சென்னையில் இவர் ஒருவர்மட்டுமே இத்தொழில் செய்பவர். இந்தியாவில் மற்றபகுதிகளில் எங்கும் இது கிடையாதென்றும் சொல்லுகிறார். பல்வேறு ஊர்களிலிருந்தும் இவருக்கு வரும் ஆர்டர்களைக் கொண்டும் இதைத் தெரிந்து கொள்ளலாம். இந்தத்தொழிலை மாணவர் முதல்வயோதிகர் வரை சுலபமாகக் கற்றுக்கொண்டு செய்யலாம் என்றும் அபிப்பிராயப்படுகிறார்.

## இத்தொழிலுக்கு வேண்டியவை

இத் தொழிலைத் தொடங்குவதற்கு சுமார் ஆயிரம் ரூபாய் மூலதனம் இருந்தால் போதும். ஆண்கள் மட்டுமின்றி பெண்களும்கூடச் செய்யலாம். இத்தொழிலுக்கு இருபது விதமான "லேத்து டர்னிங் உளிகள்' முக்கியமாக வேண்டும். மரத்தினுலான 'லேத்து' என்று கூறும் கைராட்டை தேவை. இதன்மூலம் தான் எல்லாச் சாமான்களும் செய்யப்படுகின்றன.

இரும்புச் சுத்தி, கோடரி, கடப்பாரை, உப்புக் காகிதங்கள், தாழைஓலை இத்தியாதி.

கடையில் அரக்கையும் வர்ணங்களையும் வாங்கி அவரே சொந்தமாகக் கெட்டி வர்ணம் கலந்து வத்தி போல் நீளமாகச் செய்து வைத்திருக்கிறுர். பல்லாண்டுகள் இது நீடித்திருக்க வேண்டும் என்றும், தம் பெயர் கெடாமல் இருக்க வேண்டும் என்றும் இதற்குக் காரணம் கூறுகிறுர். இவர் தொழில் செய்யும் போது பல நாட்கள் நான் கவனித்ததுண்டு. மத்து கடைவதுபோல ஓர் ஆள் ராட்டையின் 'பெல்ட்'டை இழுக்கிறுன். சில நேரங்களில் பெல்ட் இழுப்பதை நிதானமாகவும் வேகமாகவும் இழுப்பதற்காக இவர் 'உம்' என்றும் 'ஊ-ம்'' என்றும் குரல் கொடுக்கிறுர். அதற்குத் தக்கவாறு இழுப்பும் வித்தியாசப்படுகிறது, பொருள்களுக்கு உருவங்கள் கொடுப்பது இவ்வாறுதான். மின்சாரத்தில் இயங்கும் இயந்திரத்தில் இவ்வாறு செய்ய இயலாது'' என்று கூறுகிறுர்.

விளக்கு ஸ்டாண்டுகள் முதலானவை செய்ய பயன்படும் கொட்டாங்கச்சி வட்டமாகவும், முற்றினதாகவும் நீண்டுமிருக்க வேண்டும். இதை இராட்டையிலிட்டு கண்கள் இருக்கும் பக்கத்தில் வட்டமாக உளியால் வெட்டி எடுக்

கிருர். பிறகு மற்ெருரு உளியால் தேங்காயின் உள்பாகத்தி லிருக்கும் பருப்பைச் சுரண்டி எடுத்து விடுகிருர். இதை எடுக்கும்போது ஜாக்கிரதை தேவை, இதை நிதானமாகச் செய்யாவிட்டால் ஓட்டில் துவாரம் விழுந்து விடக்கூடும். பிறகு அது பயன்படாது. பிறகு ஓட்டின்மேல், பட்டை யான உளியைக்கொண்டு வழவழப்பாகச் செய்கிருர். அதன் மேல் எந்த வர்ணம் வேண்டுமோ அதை இராட்டையில் ஓட்டினை வைத்துச் சுற்றிக்கொண்டிருக்கும் பொழுதே பூசுகிருர். வர்ணம் பூசியபின் தாழம் ஓலையால் தேய்த்து வழவழப்பும், பளபளப்பும் உண்டாக்குகிருர். அவ்வாறு தேய்த்த கொட்டாங்கச்சியில் நாம் முகம் பார்க்கலாம். இதைப் போலவே விளாங்காயின் ஓட்டையும் மூங்கில் குழாய்களையும் வேப்பாலை மரத்துண்டையும் செய்கிருர்.

எந்த உருவத்தில் வேண்டுமோ அதையும் லேத்துக் கைராட்டையில் ஒடுகளைச் சொருகி உருவாக்கிக் கொள்ளு கிருர். இங்கு தயாராகும் பொருள்களைக் கண்டு ஆச்சரியப் படாதவர்களே இல்லை! இவர் செய்யும் பொருள்களில் சில:—

1. மின்சார விளக்குகள் வைப்பதற்கு ஸ்டாண்டுகள் 2. குங்குமம், பவுடர் வைப்பதற்கு மூடியுடன் கூடிய டப்பிகள். 3. பலவிதமான பழங்கள் அடங்கிய தாம்பூலத் தட்டுகள், 4. பூக்கள் வைக்கும் ஜாடிகள். உப்பு வைக்கும் பாத்திரங்கள், 5. சிகரெட்டு பிடிக்க உதவும் குழாய்கள். 6. குழந்தைகளுக்கு வேண்டிய விளையாட்டுச் சாமான்கள்.

தலைமுறை தலைமுறையாக இக்கலையை வளர்த்து வருவதால் தன்னுடைய மகன் கல்லூரியில் வாசித்தாலும், இக்கலையைக் கற்றுக்கொள்ள வேண்டுமென்று அவர் கூறு கிருர். ஓய்வு நேரங்களில் தகப்பனைப்போலவே, அவர் மகனும் திறமையாகச் செய்வதைக் கண்டேன். இப்போது

பி. யு. சி. படிக்கும் அவரது புதல்வன் படிப்பு முடிந்து பிறகு மேல்நாடுகளுக்குச் சென்று இத்தொழிலை நடத்த விரும்புகிறான்.

கைத்தொழில் அபிவிருத்தி சங்கங்கள் இதைப் போலுள்ள இடங்களுக்குச் சென்று இவர்களுக்கு வேண்டிய உதவிகளை அளித்து ஊக்குவிக்கலாம்.

இதைப் போல் பல கைத்தொழில்களைக் கவனியாமல் விட்டுவிட்டால், நாளுக்கு நாள் திரு. அப்பே பியரே அவர்கள் கூறியது போல் வேலையில்லாத் திட்டாட்டமும், வறுமையும் அதிகமாகத் தான் ஆகும் என்பது திண்ணம்.

# விலங்குகள் பதம் செய்தல்

இந்தியருக்கு மனமிருந்தால் அநேகத் தொழில் களைத் தங்கள் ஓய்வு நேரத்திலோ அல்லது, முழுநேரமா கவோ தாராளமாகச் செய்யலாம். "கருமமே கண்ணுயி ஞர்" என்றபடி நாம் உழைத்தால், ஒவ்வொரு குடும்பமும். ஒவ்வொரு குடிசைத் தொழிலை, மேற்கொள்ளலாம்.

"தொழில் தொழிற்சாலை" என்ற பெயரைக் கேட்ட தும், உடனே நம்மில் பலருக்கு லட்சம் ரூபாய் அல்லது ஆயிரக் கணக்கிலாவது வேண்டும் என்று நினைப்பதுண்டு. ஏனென்ருல், இன்று எல்லா விளம்பரங்களும் பெரிய பெரிய தொழிற்சாலைகளைப்பற்றி அல்லவா இருக்கின்றன. ஆனல் தங்கள் குடும்பங்கள் பிழைப்பதற்கு வேண்டிய தொழில், அல்லது அன்ருடத் தேவையான காய்கறி பயிர் செய்வதுபற்றி, சிந்தனைச் செய்வார் மிகவும் குறைவு. இக் காய்கறித் தோட்டத்தால் நன்மை அடைவது பலர். சில வீடுகளிலிருக்கும் இடங்களில் வாசனை யில்லாப் பூக்களும், உபயோகமில்லாச் செடிகளும் இருக்கின்றன. உபயோக மில்லாத வீண் காலம் போக்கும் நேரத்தில், சுமார் ஒரு நாளைக்குஅரை மணி நேரம் ஏதோ ஒரு தொழிலைக் கவனித் தால், அதில் எவ்வளவோ நன்மை இருக்கிறது.

இன்பம் எங்கே? என்று தேடுகிறது உலகம். அது நம் வீட்டுக் கொல்லையில் இருக்கிறது என்று நமக்குத் தெரியா

மல் இருக்கிறோம். பிரதி தினமும் நாம் வீணுக்கும் நேரத்தை எழுதி வைத்தால், மாதக் கடைசியில் நாம் தூங் கும் நேரம், வேலைக்குப் போகும் நேரம் தவிர, மீதி இருக் கும் நேரத்தில் முக்கால் பாகம் வீண் பேச்சிலும், வம்புச் சண்டையிலும், வீண் விளையாட்டிலும், சினிமாவில் "க்யூ" நிற்பதிலும் செலவு செயவதைக் கண்டு நமக்கே "ஐயோ" வென்றிருக்கும்.

இந்தியாவிலிருக்கும், ஆயிரக்கணக்கான குடிசைத் தொழில்களில், "விலங்குகளை அழுகாமல் பதம் செய்தல்" (Taxidermy) என்பதும் ஒன்று. இத்தொழிலைத் தொடங்குவ தற்குச் சுமார் ரூ. 500 இருந்தால் போதும். இத்தொழில் பார்ப்பதற்கு லேசாக நமக்குத் தெரிந்தாலும், மேலை நாட் டினர், இத்தொழில், எந்த நூற்றாண்டில் ஏன் உண்டானது என்றெல்லாம் எழுதி வைத்திருக்கிறார்கள்.

பண்டைக் காலத்திலும், இன்றும், இனிமேலும் இருக் கப்போகும் கலை. இது ஆனால் மற்றக் கலைகளைப்போல் இது ஏன் உச்ச நிலையை அடையவில்லை என்றால் இக் கலையைச் செய்து வைத்தால், சிற்பங்களைப் போலவும், சித்திரங் களைப் போலவும், பல்லாண்டுகள் நீடித்து இருக்காது. சில ஆண்டுகளுக்குள் அழிந்து போகக் கூடியவை. மேலும் பண்டையில் செய்தது நல்லமுறையாகச் செய்யாததால், மற்ற கலைகளுடன் இது சேர்ந்து வளர முடியாமல் தனித்து நின்றது.

## இக் கலையின் வரலாறு

கார்த்த ஜீனியன் நேவி கேட்டர் என்பவர் தம் சுய சரிதத்தில், "அவர் கானகத்தில் காடர்களைக் காண்பதற் காக அலையும் போது, ஒரு அதிசய மிருகத்தைப் பார்த்தா ராம். அதனுடைய தோலில் பஞ்சடைத்து, பதம் செய்து

வைத்தாராம். அந்த அதிசய மிருகமே கொரில்லா. அங்ஙனம் பதம் செய்தது, 500 கி.மு. என்று சரித்திரம் கூறுகிறது. ஆனால் அவர் இக் கலையை வளர்ப்பதற்காக அல்ல. மனித குரங்கின் உருவத்தை, மக்கள் சமுதாயம் காண வேண்டும் என்பதற்காகவும், தோலை சேமித்துக் வைப்பதற்காகவுமே செய்தாராம்.

ஏறக்குறைய அதே நூற்றாண்டில் எகிப்திய அரசர்களுடைய சவங்களைப் பாதுகாப்பதற்காக, பலவித வாசனைத் திரவியங்களைச் சவப் பெட்டியில் கொட்டி, பல்லாண்டுகள் வரையில், சவத்தைப் பாதுகாத்து, அதன் மேல் பெரிய "பெரமிட்டுகள்'' கட்டினார்கள் என்று சரித்திரங்கள் பேசுகின்றன. இத்தொழில் இவ்வகையாக அப்பகுதியில் வளர்ந்தது. இவ்விதமாகச் செய்தால் சில ஆண்டுகளுக்குப் பின், அவர்களுக்கு உயிர் உண்டாகும் என்று நம்பினார்கள். இவ்வித மத சம்பந்தமான நம்பிக்கையில் உலகில் ஒரு பகுதியில் இக்கலை வளர்ந்தது எனக் கூறலாம்.

எகிப்தியர்களிடம்தான், இப்பழக்கம் இருந்ததாகக் கூறுவதற்கில்லை.

நீலகிரியில் வாழும் தோதுவர்களும், கோத்தர்களும் பஸ், ரயில் வண்டி இல்லாத பண்டைக்காலத்தில், தங்கள் இனத்தில் யாராவது இறந்தால், சுமார் பத்து பதினைந்து நாட்கள் வரையில் உப்பும், சில பச்சிலைகளையும் தடவி தங்கள் உறவினர் வரும்வரையில் பிணத்தைக் காத்து வைத்திருந்தார்கள்.

இங்ஙனம் தென்னாட்டில் என்றால், வடக்கே திபேத்தின் ஓர் நகரமாகிய, "லாசா''வில் வாழும் மக்கள் இன்றும் தங்கள் குடும்பத்தில் இறந்தவர்களைக் குறைந்தது ஒரு மாதம் முதல் ஐந்தாண்டுகள் வரை பிணத்தின் மேல் சில பச்சிலைகளையும், உப்பையும் கலந்து தடவி, நாற்றமடிக்கா

மல் வைத்திருக்கின்றனர். ஏனென்றால், வழி பாதைகள் சரியாக இல்லாததால், தங்கள் உறவினரிடம், தகவல் கூறி, அவர்கள் அநேக மைல்கள் நடந்துவரும் வரை திபேத்தியர்கள் பிணத்தை வைத்திருப்பார்கள். அப்பிணம் வீட்டில் இருக்கும் வரையில், வருவோர் போவோருக்கு விருந்துகள் நடைபெறும்.

## பறவைகளைப் பதம் செய்தல்

இவ்விதமாக, இக்கலைகள் பல துறையில் மறைமுகமாக வளர்ந்து, கடைசியில் தங்கள் தங்கள் ஊரிலிருக்கும் ஆச்சரியமான விலங்குகளையும், பறவைகளையும் வெளி நாடுகளில் கொண்டுபோய் வளர்க்கத் தொடங்கி, அவைகள் அந்நாட்டின் சீதோஷ்ணநிலை பிடிக்காததால் இறந்து விடவே, அவைகளின் நினைவுச்சின்னமாகப் பதம் செய்து, நிற்பதைப் போலவும், பறப்பதைப்போலவும் பல உருவங்கள் செய்தார்கள்.

அங்ஙனம் முதன் முதலில் ஹாலந்து தேசமக்கள் கிழக்குத் தீவுகளிலிருக்கும் சில விலங்குகளையும், பறவைகளையும், "ஸ்டப்பில்ஸ்" செய்து 1517-ல் ஐரோப்பாவுக்கும் பிற நாடுகளுக்கும் கொண்டு போனார்கள் என்று சரித்திரச் சான்றுகள் இருக்கின்றன.

இதற்குப் பிறகு பல நாடுகளிலிருக்கும் அரச குடும்பங்களுக்காகவும் இக்கலை வளர்க்கப்பட்டது. இக்கலை சம்பந்தமான ஆராய்ச்சித்துறையில் 1689-ல்தான் முதல் நூல் பிரசுரம் செய்யப்பெற்றது. பிறகு எல்லா நாடுகளிலும் கொஞ்ச கொஞ்சமாகப் பரவியது.

இருபதாம் நூற்றாண்டில், பதம் செய்வதைவிட நாகரிகத்தில் பிற்போக்கானவர்கள் வாழ்ந்த, ஆறு நூற்றாண்டுகளுக்கு முந்திய காலத்தில் இக்கலை, பலநூற்

ருண்டுகள் கெட்டுப் போகாமல் இருக்க, அவர்கள் உயர்ந்த மருந்து முறைகளைக் கையாண்டார்கள் என்று பல சரித்திரச் சான்றுகள் இருக்கின்றன. இத்தொழிலைச் செய்ய, முதலில் சில மருந்துகள் வாங்குவதற்கு, "லைசென்ஸ்" வாங்கவேண்டும்.

## வேண்டிய பொருள்கள்

கத்திகள், கத்தரிக்கோல்கள், சிறுவாள், சாமணம் பலவித கரண்டிகள், பலவித அளவுக் கொரடாக்கள், பலவித செயற்கைக் கண்ணாடிக் "கண்கள்," பஞ்சு, சணல், தேங்காய் நார்கள், கம்பிகள், மரப்பலகை ஸ்டாண்டுகள், பெரிய வாளி, பேசின், ஊசி, நூல், கண்ணாடி ஊசிக்குழாய்கள், கண்ணாடி புட்டிகளும், ஜாடிகளும், பலவித அளவில் தகர டப்பிகள் முதலியன.

## மருந்து வகைகள்

கார்பாலிக் ஆசிட், சோப்பு, ஆர்கனிக் ஆலம், உப்பு, மயக்க மருந்து, சூடம், ஐட்ரோட்ஜின் பராக்சைட், ஊசியின்மூலம் தேகத்தில் செலுத்தும் மயக்க மருந்துகள், பராக்சைட், சுண்ணாம்பு, பார்மலின், சுத்தமான வடி தண்ணீர் முதலியன வேண்டும். இவைகளைக் கொஞ்சம் கொஞ்சமாகவும் வாங்கலாம்.

## திராவகத்தில் வைத்து

சுத்தமான தண்ணீரில் அளவாக, "பார்மலீன்" என்னும் அமிலத்தை கண்ணாடி ஜாடியில் கலந்துகொள்ள வேண்டும். பிறகு இறந்துப்போன பிராணியை முதலில் உயிருடன் இருப்பதைப்போல் சரிப்படுத்திக்கொண்டு பிறகு தண்ணீரில் கலந்த அமிலத்தை ஊசியின் மூலம், உடலில் செலுத்தவேண்டும். பிறகு உடலில் அழுக்கு நீங்க ஒரு வாரம் சுத்தமான தண்ணீரில், இதைப் போட்டு

ஊவைக்க வேண்டும். சில நாட்களுக்குப்பின், தண்ணீரில் மெதுவாக அலசவேண்டும். பிறகு அந்தந்த (பாம்பு-பல்லி) பிராணிகளுக்கேற்ற அளவான கண்ணாடி ஜாடியில் திராவகத்தை ஊற்றி, உருவம், சுருங்காமலிருக்க கண்ணாடிப் பலகையில் சேர்த்துக் கட்டி ஜாடித் திராவகத்தினுள்விட வேண்டும். பிறகு ஜாடியின் மூடியை காற்றுப் போகாமல் மெழுகால் மூடிவிட வேண்டும்.

## எலும்புக்கூட்டை பத்திரப்படுத்துதல்

இறந்த பிராணிகள் எலும்புள்ள பிராணிகளா? அல்லது எலும்பும் சிறகுகளும் கலந்த பிராணிகளா? என்று பாகுபாடு செய்துகொள்ள வேண்டும். பறவைகளையோ, விலங்குகளையோ முதலில் கத்தியின் உதவியால் வயிற்றுப் பாகத்தைக் கிழித்துத் தோலை உரிக்கவேண்டும். பிறகு எலும்புடன் ஒட்டி இருக்கும் சதையை அறுத்து எடுக்க வேண்டும். மண்டை ஓட்டை மட்டும், சிறு கரண்டியால், பின் பக்கமாக சுரண்டி, மூளையை எடுக்க வேண்டும். மூடி உள்ள ஜாடியில் சுத்தமான தண்ணீரில், இந்த எலும்புக் கூட்டைப் போட்டு, நன்ருக மூடிச் சில நாட்கள் வரையில், சந்துபொந்தில் ஒட்டி இருக்கும் சதைகள் அழுகும்படி வைக்க வேண்டும். பிறகு எடுத்துக் கடுமையான துர்நாற்றத்தைச் சகித்துக்கொண்டு, நன்ருக அலசி, மீதி ஒட்டி இருக்கும் சதையையும் கத்தியால் நீக்கவேண்டும். பிறகு எலும்பைப் பெரிய கண்ணாடி ஜாடியில் ஹைட்ரோஜன் பராக்ஸைடை ஊற்றி, அதில் இரண்டு மூன்று நாட்கள் ஊற வைக்கவேண்டும். பிறகு தண்ணீரில் அலசி, அதில் ஒட்டி இருக்கும் இறைச்சிகளை நீக்கி, வெயிலில் காயவைக்க வேண்டும். அந்த அமிலத்தின் உபயோகம், எலும்பிலிருக்கும் நுணுக்கமான சதையையும் தின்று, எலும்புக்கு வெண்மையான தன்மையைக் கொடுக்கும். கடைசியில்

எலும்பை அதனதன் இடத்தில் சரிபார்த்து, கம்பியின் மூலமோ அல்லது சிறிய எலும்புகளாக இருந்தால், "டூரோ பிக்ஸ்'' என்ற பிசினியால், உடைந்த பாகங்களைச் சேர்த்து ஒட்டி, பிறகு மணையின்மேல் நிறுத்தவேண்டும். இக் கலைக்கு தச்சனின் உதவியும் வேண்டும்.

## மீண்டும் உயிர்பெற்றதுபோல்

உயிர் நீங்கிய பிராணிகளை வயிற்றுப் பாகத்தில் கிழித்து உள்ளிருக்கும் எலும்பை சதையோடு கபாலத்தைத் தவிர, எடுத்துவிட வேண்டும். கபாலத்தில் மட்டும், பின்பக்கமாக நாக்கையும், மூளையையும் எடுத்துவிட்டு, சில மருந்துப் பொருள்களைக் கலந்து, சணல் நாரை அடைக்க வேண்டும். பிறகு தோலினுள், ஆர்ஸ்சநிக் ஜிக் ஆக் சையிட், எலுமிச்சை, சோப்பு, முதலியவைகளை ஒன்ருகச் சேர்த்துக் கரைத்து, பஞ்சால் தோலுக்குள் தடவி, சுமார் பத்து நிமிஷங்கள் வரையில் வைத்துவிட வேண்டும். பிறகு அந்தந்தப் பறவைகளுக்கோ, அல்லது பிராணிகளுக்கோ உடலின் அளவுக்குத் தகுந்தாற்போல் நாரால், ஒரு உருவத்தை கெட்டிப்படுத்தி, வைத்துக்கொள்ள வேண்டும். பிறகு அவை அவைகளுக்குத் தகுந்த கம்பியை எடுத்து செயற்கை நார் உடலுடன், தலைப் பாகத்திலிருந்தும், கால், கை, இறக்கை முதலிய பாகத்திலிருந்தும் தனித்தனியாக வரும் கம்பிகளோடு மேற்சொன்ன செயற்கை நாரை உடலில் சேர்த்து நன்ருக இணைக்க வேண்டும். உடலின் எல்லா பாகங்களிலும் தகுந்த அளவு நாரை, வைக்கவேண்டும். பிறகு, கிழித்த வயிற்றின் பாகத்தைச் சரியாகத் தைக்க வேண்டும். தைக்கும்போது உடலில் சுருக்கமிருந்தால் சணல் நாரால் சரிப்படுத்தித் தைக்கவேண்டும். கடைசியாக அந்தந்த உருவத்திற்கும், பிராணிகளுக்கும் தகுந்தாற்போல் செயற்கை கண்ணுடிக் கண்களை வைக்கவேண்டும்.

பிறகு சில மணி நேரம் வெயிலில் ஒழுங்கான உருவத்தில் கட்டை மணையுடன் கட்டிக் காயவைக்க வேண்டும். காய்ந்த பிறகு கட்டையுடன் கட்டிய நூலை நீக்கி, ரச கர்ப்பூரத்துடன் பீரோவில் பூச்சி அணுகாமல் வைத்திருப்பதைக் காணும்போது, உயிர் கொடுத்து இருப்பதுபோல் தோன்றும்.

## பாம்புத் தோல் உரிக்கும் கலை

"பாம்பு என்றால், படையும் நடுங்கும்" என்பது பழமொழி. செத்த பாம்பாக இருந்தாலும், பயம்தான். பாம்புகளின் எலும்பு எடுப்பதும், தோலை நீக்குவதும் ஒரு தனிக் கலையாகும். பாம்புகளின் வயிற்றுப் பாகத்தில் சுமார் ஆறு அங்குலம் நீளம் நேராக உடலைக் கிழித்து, ஒரு பக்கமாக காலில் மிதித்துக்கொண்டு, பாதி அளவு பாம்பை முதலில் இழுக்கவேண்டும். பாதி அளவு இழுத்தபின், மீதி பாதி அளவை பின்னர் இழுத்துவிட வேண்டும். இங்ஙனம் இழுத்தால் தோல்வேறு, எலும்பு வேறாகப் பிரிந்துவிடும். எதனுடைய எலும்பாக இருந்தாலும் சரி, அந்தந்த எலும்புகளுக்கு அளவாகவேதான் கம்பிகளை எலும்பினுள் செலுத்திக் கட்டவேண்டும்.

## இக்கலையின் நன்மைகள்

பல்லாண்டுகளுக்குப் பிறகு அழிந்து, மறைந்துபோன பொருள்களையும் பிராணிகளையும், பறவைகளையும் அந்தந்த உருவத்தில் காண ஒரு வாய்ப்புண்டு. பண்டைக் காலத்தில் இருந்த சில மிருகங்களின் எலும்புக் கூடுகளை இங்ஙனம் செய்ததால், பூண்டோடு மறைந்த பிராணிகளின் உருவங்களை இன்று, "இங்ஙனம்தான் இருந்திருக்க வேண்டும்" என்று ஓர் அளவுக்குக் கூற இயலுகின்றன. இறந்து போகும் பிராணிகள், இக்கலையால் ஓர் அழகு பெறுகின்றன. சுய உருவத்திலும், வர்ணத்திலும் சுமார் பல்லாண்டு

கள் வரையில் காணலாம். பிராணி நூல் பாட போதனைக்கும் இவை உதவும்.

## இத்தொழில் வளர

இக்கலைகள் இந்தியாவில் தேய்ந்தும், மேல் நாட்டில் வளர்ந்தும் வருகின்றன. நம் அரசாங்கத்தின் உதவியும், மேல் நாட்டு உதவியும், சங்கங்களின் உதவியும் கல்லூரியில் ஆராய்ச்சி வகுப்புகளும் இருந்தால் இத்தொழில் செழித்து வளரும். இந்தியா முழுவதும் சோலைகளிலும் காடுகளின் அருகிலும் இக்கலைகளை வளர்த்தால் லாபகரமாயிருக்கும்.

# வாழை வாழாத காடு

பூனுவில் சில நாட்கள் தங்கும்படி நண்பர் திரு. மாட்டீன் அவர்கள் கூறினர். அங்ஙனம் தங்கிய நாட்களில் பூனுவில் பல இடங்களைக் கண்டபின் சுமார் நாற்பது மைல் தூரத்திலிருக்கும் "கார்லா" குகைக்குச் செல்லலாமென்று எண்ணி நானும் திரு. ஜார்ஜ் அவர்களும் பிரயாண மானோம்.

"கார்லா, மலைப் பிராந்தியமானதால் பகல் உணவுக்காக ரொட்டிகள் மாத்திரம் எடுத்துக்கொண்டு, வாழைப் பழமும், காப்பியும் அங்கே வாங்கிக்கொள்ளலாம்" என்றேன்.

பிறகு "மலோடி" இரயில் நிலையத்தை அடைந்தோம். கார்லா குகைக்கு வடக்கு நோக்கிச் சுமார் இரண்டு மைல் நடக்கவேண்டும் என்று மலோடி கிராம வாசிகள் கூறினர் கள். நானும் திரு. ஜார்ஜ் அவர்களும் ஓட்டலுக்குச் சென் றோம். ஓட்டல் பணியாள் எங்களைக் கண்டதும் "டீயும் காப்பியும் பாலில்லாமலும், சர்க்கரை இல்லாமலும்தான் இங்குச் சாப்பிடுவது வழக்கம்" என்று கூறினர். அவர் கூறியதைக் கேட்டதும் திகைத்தது என் வயிறு. ஆண்ட வனே! நீலகிரியில் தொதுவர்கள் வாழும் எண்பது மந்து களுக்குமேல் பிரயாணம் செய்தேன். அந்த மந்துகளில் சில

வற்றில்தான்: காப்பியில் உப்பைச் சேர்த்துக் குடிக்கின்ற னர் என்ருல், இது அதைவிடக் கஷாயமாக அல்லவா— இருக்கிறது! என்று கூறினேன்.

"வேண்டாம் ஐயா! கொஞ்சம் வெந்நீராவது கொடும் என்று வெந்நீர்மட்டும் வாங்கிக்கொண்டோம். பிறகு அங் கிருக்கும் கடைகளில் ரொட்டிக்கு வாழைப்பழம் வாங்க லாமாவென்று எல்லாக் கடைகளிலும் கேட்டுப் பார்த் தோம்.

"இப்பகுதியில் வாழை மரங்களோ, வாழைப்பழங் களோ கிடையா. வாழைப்பழங்கள் வேண்டியிருந்தால் குறைந்தது இருபது மைல்கள் போகவேண்டும். அவ்வளவு தூரத்திலிருந்து வாங்கி வந்தாலும் சுமார் ஒரு பழம் இரண்டு மூன்று அணுவுக்கு விற்ருல்தான் எங்களுக்கு லாபம் கிடைக்கும்'' என்று கூறினர் ஒரு கடைக்காரர். இவற்றைக் கேட்டதும் காட்டுப் பிரயாணங்களுக்கு வேண்டியதை என் தோள்சுமப்பதுபோல், இங்கு வாழைப் பழத்தையும் மற்றப் பொருள்களையும் ஏன் சுமக்கவேண் டும் என்று சிறிது சோம்பேரித்தனமாக இருந்ததற்குத் தண்டனை இது. எவ்வளவோ காடுகளுக்குச் செல்லுகிறேன் காட்டு வாசிகளின் குடிசைக்குப் பின்ஞல் வாழைத்தோட்ட மில்லாமல் ஒரு குடிசையையும் நான் கண்டதில்லை. இருபது ஆண்டுகள் பிரயாணம் செய்ததில் இதுதான் முதல் அனு பவம். வாழைகளின் அனுபவமும் வாழைகளிலிருந்து செய்யப்படும் மருந்து வகைகளும் காட்டு வாசிகளைக் கேட் டால்தான் தெரியும். வாழையின் முழுப்பலனையும் நம்மை விட அவர்கள்தான் அடைகிருர்கள் என்று கூறலாம்'' என்று என் நண்பர் திரு. ஜார்ஜ் அவர்களிடம் கூறினேன்.

''வாழை மரம்'' என்ன அவ்வளவு முக்கியமானதோர் தாவர இனமா? சரி! நாம் கார்லா குகையைக் காண்பதற்கு

முன் வாழையை எந்தெந்த வகையில் காடர்கள் உபயோ கப்படுத்துகிருர்கள் என்பதைக் கூறுங்கள் பேசிக் கொண்டே இரண்டு மைல் நடக்கலாம்'' என்ருர் என் நண்பர்.

காடுகளில் ஒற்றையடிப் பாதையில் பிரயாணம் செய்த பின், எங்களைக் காடர்கள் "வாருங்கள்'' என்று அழைப்ப தற்குமுன், அவர்களது கொல்லையிலிருக்கும் வாழைமரங்கள் தங்களுடைய பெரிய இலைகளை அசைத்து அசைத்துக் காட்டி நம்மை அழைக்கும். வாழைமரங்களைக் கண்டபின் தான், அவர்களுடைய குடிசைகள் அங்கே இருக்கின்றன வென்று நான் தெரிந்துகொள்ளுவேன். ஒவ்வொரு குடிசை யின் பின்புறத்திலும் ஒரு வாழையாவது பயிர் செய்யப்பட் டிருக்கும். பயிர் செய்வதில் வாழை மிகவும் சுலபமானது. தண்ணீர் ஊற்றுவதற்கு ஆள் வைக்கவேண்டும் என்ற கவலையும் இல்லை. வீட்டின் உபயோகத்திற்கு வேண்டிய வாழைகளை ஒரு கெஜம் சுற்றளவுள்ள இடத்தில் பயிர் செய்யலாம். வாழையை நடுவதற்குமுன் குழியை நன்ருகக் குப்பையால் பதம் செய்யவேண்டும். வாழைக் கன்றுகளைக் காற்றில் விழாமல் நன்ருக நடவேண்டும்.

இந்தியாவின் பூர்வீக பயிர்களில் வாழையும் ஒன்ருக இருந்தும் 'கார்லா' மலைப்பிராந்தியத்தில் இப்பயிரைக் காணமுடியவில்லை என்ருல் மிகவும் ஆச்சரியமாகவும் வியப் பாகவும் இருக்கிறது. கி.மு. 327-ல் அலெக்சாண்டர், ஜீலம் நதிக்கரையில் வாழைத்தோட்டங்கள் இருந்ததாகத் தம் பிரயாணக் குறிப்பில் கொடுத்துள்ளார். பிற்காலத்தில் வியாபாரிகள் மூலம் பல நாடுகளுக்கும் அது பரவியது. இந்தியாவின் தென் பகுதியிலும் வட பகுதியிலும் ஊருக்கு ஊர் வாழையின் பெயரும் உருவும் மாறுபடுகின்றன.

சுண்டுவிரல் அளவுள்ள வாழைப்பழம் முதல் முழம் நீள முள்ள வாழைப்பழம் வரையில் இன்றும் காணலாம்.

நாள்தோறும் கிடைக்கும் பழம் வாழைப்பழம் ஒன்று தான். மேலும் வாழைமரத்தின் எல்லாப் பாகங்களும் நமக்கு உபயோகப்படுகின்றன. எதையும் நாம் தள்ளுவ தில்லை. மேலும் வாழை நல்ல காரியங்களுக்கும், கெட்ட காரியங்களுக்கும் உபயோகப்படுகின்றது. வாழையிலையில் சாப்பிடுவது தேகத்திலிருக்கும் பித்தத்தைத் தணிக்கும். உடல் மினுமினுப்பும் உண்டாகும். காட்டில் சாராயம், அபினி முதலியவைகளைச் சிலர் மிதமிஞ்சி உபயோகித்து மயக்கத்துடன் விழுந்து கிடக்கும்போது மூப்பன் (காடர் தலைவன்) வாழைப் பட்டைச் சாற்றைப் பிழிந்து கொடுத்து மயக்கத்தைப் போக்குவார்.

நீர்ச்சுருக்குக்கு வாழைக்கிழங்கை அரைத்து எலுமிச் சங்காய் அளவு எடுத்து துணி சுட்டுக் கருக்கிய சாம்பல் சுமார் மூன்று வராகன் எடை சேர்த்து விளக்கெண்ணெய் யில் குழப்பி சாப்பிட்டால் நீர் அடைப்பு குணமாகிறது.

காட்டில் தேன் அதிகமாகக் கிடைப்பதால் அதை சிலர் அதிகமாகக் குடிப்பதுண்டு. இதனால் உடல் சூடு உண்டாகி நீர்ச்சுருக்கு, நீர்க்குத்தல் முதலிய நோய்கள் உண்டாகின்றன. இந்நோய்களை காடர்கள் இதே மருந்து சாப்பிட்டு போக்கிக் கொள்ளுகின்றனர். இந்த மருந்தை எந்த நேரத்திலும் சாப்பிடலாம். இரண்டே வேளை போதுமானது. பத்தியமில்லை.

காடர்கள் நல்ல பாம்பு கடித்தாலும் சரி அல்லது எந் தப் பாம்பு கடித்தாலும் சரி உடனே வாழை மரத்தை அரிவாளால் அடியிலும் நுனியிலும் வெட்டி அந்தத் துண்டத்தைக்கொண்டு வந்து நீளமாக வாழைப் பட்டை களை விரித்து கடிக்கப்பட்டவனை அதன்மேல் படுக்க

வைத்துவிடுவர். அப்படிச் செய்தால் பாம்பு கடிக்கப்பட்டவனுக்கு பல் கிட்டாதாம். பல் கிட்டிய பின்னும் இப்படிச் செய்யலாம். பிறகு வாழைப் பட்டையை உரித்து மண் சட்டியிலோ, அல்லது வேறு எந்தப் பாத்திரத்திலோ சாறு பிழிந்து கால்படி (சென்னைப் படியில்) சாறைக் கடிக்கப்பட்டவனுக்குக் கொடுக்கின்றனர். சிறிதுநேரத்திற்கெல்லாம் அவன் குணமாகி எழுந்து நடப்பான். பிறகு பாடியில் உள்ள மற்ற காடர்கள் ஒன்றுகக்கூடி நாகத் தேவதை அல்லது நாகேந்திரனுக்கு கூத்தாடுவார்கள். (நடனம்) நல்ல பாம்பு தவிர மற்ற பாம்புகளாக இருந்தால் பத்துபேருக்கு ஒருவன் இறந்துவிடுவானும்.

காடத்திகள் சாதாரணமாகத் தங்கள் குழந்தைகளுக்கு நான்கு ஐந்து வயதாகும்வரையில் பால் கொடுப்பதையும் அவ்வளவு ஆண்டுகள்வரையில் தாய்க்கு பால் மிதமிஞ்சி இருப்பதையும் கண்ட நான் சில காடத்திகளிடம் அதன் உள் மர்மத்தைக் கேட்டேன். கீழ்க்கா நெல்லி வேரை அரைத்துப் பசும்பாலில் கலந்து குழந்தையின் தாய் குடிக்கிருள். ஒரு வாரம் அப்படி குடிப்பாளாம். பத்தியம் ஒன்றுமில்லை.

மேலும் பால் சில தாய்மார்களுக்கு தானுகவே கொட்டுமாம். அப்படி பால் அதிகமாக சுரப்பதைத்தடுக்க வாழைப் பிஞ்சை அரைத்து தனப்பகுதியில் பற்றுப்போடுவதைப் போல் தடவினுல் பால் சுரப்பது நின்று விடுகிறதாம். இன்னும் எவ்வளவோ மருந்துகள் மலைவாசிகளிடம் மறைந்து கிடக்கின்றன. தீயால் சுட்ட புண்ணையும் வாழைப்பட்டையின் சாற்றைப் பிழிந்து ஊற்றிக் குணமாக்குகிறுர்கள். வயிற்றில் சிக்குண்டிருக்கும் பலவற்றை வெளிக் கொணர பேதி மருந்தாலும் வெளியில் வராமல் கடைசியில் கத்தியால் வயிற்றை அறுத்து நாசம் செய்யக்கூடிய 'கேசா' இருந்

தாலும் சரி, வாழைத்தண்டு கூட்டுச் செய்து சாப்பிடுவது நல்லது. அப்படியும் வயிற்றிலிருக்கும் கல், மயிர் முதலியவை கள் வெளியில் வராவிட்டால், வாழைத்தண்டை இடித்து சாறு எடுத்து வாரம் இரண்டு மூன்றுமுறை சாப்பிடவேண் டும். சுமார் கொட்டாங்கச்சியில் பாதியளவு சாப்பிடலாம்.

எந்தக் காய் கறிகளையும் வேகவைத்து நீரை, சிலர் இறுத்துவிடுகின்றனர். அப்படிச்செய்யவேகூடாது. வாழைப் பூவைச் சமைக்காத வீட்டையே காட்டில் காணமுடியாது. ஆனால் நாம் சமைப்பதற்கும் அவர்கள் சமைப்பதற்கும் ருசியில் வித்தியாசம் இருந்தாலும், ஒவ்வொரு காய் கறியை யும் சமைப்பதற்கு அவர்கள் காரணங்கள் தெரிந்து வைத் திருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டேன். வாழைப் பூவைச் சாப்பிடுவதால் அறுபத்துநான்கு வகையான வியாதிகள் குணமாவதுடன் அறுபத்துநான்கு புதிய குணங்களும் நம் முடைய தேகத்தில் உண்டாகின்றன. நீண்ட ஆயுளும் உடையவர்களாய் இருக்கலாம். குழந்தை இல்லாத தம்பதி களுக்குக் காட்டில் அடிக்கடி வாழைப்பூவை வாரத்திற்கு மூன்றுமுறை சமைத்துக் கொடுக்கின்றனர். அதன் மூலம் ஓர் ஆண்டுக்குள் அப்பெண்மணி கர்ப்பவதியாவாளாம். தென்னிந்தியாவில் காட்டில் வாழும் எல்லா ஆதி வாசி களும் தினமும் ஒரு வாழைப்பழத்தையாவது சாப்பிடாமல் இருக்க மாட்டார்கள். ஆனால் வாழைப் பழத்தில் நல்ல பழத்தைச் சாப்பிடுவதுதான் நலமே ஒழிய, நன்ருகப் பழுக்காத வாழைப்பழத்தைச் சாப்பிட்டால் அதைப்போல் உடலுக்குக் கெடுதி செய்வது வேறு எதுவுமே கிடையாது. மேலும் வாழை மிகவும் சுத்தமான பழவகை. ஆகையால் காட்டிலும் நாட்டிலும் கடவுளுக்குப் பூசை செய்யும்போது வாழைப்பழத்தைத்தான் எல்லாப் பழங்களையும்விட விசேஷமாக வைக்கின்றனர். காடுகளில் நல்ல பசுவின் பால் கிடைக்கும். உடலில் சதை பிடிக்காதவர்கள் நல்ல பசு

வின் பாலுடன் வாழைப்பழத்தைக் கரைத்துக் காலையிலும் மாலையிலும் குடித்து வருகிறார்கள். உண்மையிலேயே சில ஆண்டுகளுக்கு முன் பார்த்த ஒரு மங்கையை மறுபடியும் பார்த்து அடையாளம் கண்டுபிடிக்க முடியாமல் விழித்தேன். உடலில் சதை வளர்ந்து தொந்தி விழுந்திருக்கும் காடர்களுக்குக் காட்டில் ஓடுவதற்கும் மரம் ஏறுவதற்கும் மிகவும் கஷ்டமாயிருக்கும் அல்லவா? ஆகையால் அவர்கள் பசுவின் பாலுடன் வாழைப் பழத்தையும் கரைத்து ஒருவேளைசாப்பிடுவார்கள். ஒருவேளை உணவையே சாப்பிட்டுத் தங்கள் உடற் சதையைக் குறைத்துக்கொள்ளுகின்றனர். இன்னும் வாழையில் என்னென்ன அதிசயங்கள் மறைந்து இருக்கின்றனவோ யாருக்குத் தெரியும்? மேலும் பேயம் பழத்தைச் சிலர் அம்மை கண்டவர்களுக்கும் கொடுப்பது வழக்கம். இதை விளக்கெண்ணெயில் கலந்து காலையில் ஒரு துண்டு சாப்பிடுவதும் உண்டு. காட்டில் இருப்பவர்கள் குல தெய்வங்களுக்கு ஏதாவது படைக்க வேண்டுமென்றால் வாழை வளர்ந்த பிறகு முதலில் தோன்றிய தலைவாழை யிலையில்தான் படைப்பார்கள். இவ்வளவு நன்மை தரும் வாழைகளைப்பற்றி தமிழ் நாட்டில் பல பழமொழிகள் வழங்குகின்றன.

1. ஆண்டு முழுவதும் கிடைக்கும் பழம் எது?

2. இன்பத்திற்கும் துன்பத்திற்கும் நடு வீட்டுச் சம்பந்தியாக வரும் பொருள் எது?

3. பெரிய இலை கொடுக்கும் மரம் எது?

4. கிளையில்லை! ஆனால் இலை உண்டு அது எந்த மரம்?

இதைப்போல் இன்னும் எவ்வளவு பழமொழிகள் நம் தமிழ் நாட்டில் மறைந்து இருக்கின்றனவோ யாருக்குத்

தெரியும்! என்று திரு. ஜார்ஜ் அவர்களிடம் சொல்லிக் கொண்டே கார்லா குகையை அடைந்தோம். பிறகு நான் கூறிய விஷயங்களை நண்பர் மராட்டி மொழியில் அந்த கிராம வாசிகளுக்கு எடுத்துக் கூறினர். அவர்கள் ஆச்சரியப்பட்டுத் தாங்களும் அதைப் பயிர்செய்ய ஒப்புக் கொண்டார்கள்!

# வேடன்தாங்கல்

சென்னையிலிருந்து 50 மைல் தெற்கே செங்கல்பட்டு ஜில்லா மதுராந்தகம் தாலூகா கருங்குழி கிராமத்தைச் சேர்ந்ததோரிடமே வேடன் தாங்கல் என்பது.

சென்னையிலிருந்து பஸ்ஸிலோ அல்லது ரயிலிலோ இவ் விடத்தை அடையலாம். கருங்குழி ரஸ்தாவிலேயே, அண்ணமார் கோவிலுக்குப் பக்கத்திலே வேடன் தாங்க லுக்கு வழி போகிறது. அவ்வழியின் மூலம் 2 மைல் மேற் கிலும், 2 மைல் தெற்கிலும் சென்றால் மேற்படி வேடன் தாங்கல் கிராமத்தையடையலாம். பண்டையில் வகுளா ரண்யம் என்று வழங்கப்பட்டதுதான் இன்றைய மதுராந் தகம் தாலூகா. வகுளாரண்யம் என்ற பெயரே முன் காலத்தில் இங்கு பெரியதோர் காடும், ஏரியும் இருந்திருக்க வேண்டுமென்பதை எடுத்துக் காட்டுகிறது. (வகுளம்+ ஆரண்யம் — மகிழமரம் + காடு) இவ்விடம் மதுரசம் பொருந்திய பல புண்ணிய தீர்த்தங்கள் மலிந்திருப்பதால் மதுராந்தகம் என்றொரு காரணப் பெயரும் புராணங்களில் கூறப்பட்டுள்ளது.

வேடன்தாங்கல் என்ற ஏரியும், கிராமமும் பல நூற் றூண்டுகளாக இருக்கின்றன என்றும் வேடர்களைத் தாங்கி நின்றதாலேயே பண்டைக்காலம் முதற் கொண்டே

வேடன்தாங்கல் என்ற காரணப் பெயர் வழங்கி வந்திருக்கிறது என்றும் கூறப்படுகிறது.

மதுராந்தகம் ஏரிக்குப் பக்கத்திலேயே இந்த வேடன் தாங்கல் ஏரி அமைந்திருக்கிறது. அதன் சுற்றளவு சுமார் மூன்று மைல். அதன் நடுவில் தீவுகளைப்போல் 500 கடப்பை மரங்கள் இன்றுமிருக்கின்றன. அந்த மரங்கள் நன்ருக வளர்ந்த வேப்ப மரங்களின் அளவுக்கு நடு ஏரியில் வளர்ந்திருக்கின்றன. சுமார் ஆறு மாதங்கள் வரையில் அம்மரங்களின் அடி பாகத்தின் உயரத்திற்கு ஏரியில் தண்ணீர் நிறைந்திருக்கிறது.

## பலவிதப் பறவைகள்

இந்த 500 மரங்கள் ஒவ்வொன்றிலும் குறைந்தது ஆயிரம் பறவைகளுக்கு மேலிருக்கின்றன. ஆனல் ஒரே ஜாதிப்பறவைகள் என்று சொல்வதற்கில்லை. எல்லாப் பறவைகளும் தண்ணீர்ப் பறவைகள் என்று மட்டும் கூறலாம். இரவில் ஆகாரம் தேடி பகலில் காவல் காக்கும் பறவைகளும், பகலில் உணவு தேடும் பறவைகளும் கலந்து இருக்கின்றன இங்கு. சில பறவைகள் உருவத்தில் பெரியதாகவும் சில சிறியதாகவும் இருக்கின்றன. சிலவற்றின் தேகம் நீண்டும் உருண்டையாகவும், சில தட்டையாகவுமிருக்கின்றன.

சில பறவைகளுக்குப் படகைப்போல் தேகமும், அலகும் அமைந்திருப்பதால் தண்ணீருக்குள் பாய்ந்து செல்ல வசதியாக இருக்கிறது.

சில பறவைகளின் அலகுகள் தட்டையாகவும்குட்டையாகவும் கூராக நீண்டும், சில வளைந்தும், சில முனையில் மட்டும் வளைந்துமிருக்கின்றன. சில பறவைகளுக்கு அலகுக்குக் கீழ் பைபோல் தோல் வளர்ந்திருக்கிறது. சில

வற்றின் அலகுகள் கரண்டிபோலவும் உலக்கைபோலும் அமைந்துள்ளன. அந்தந்தப் பறவைகளுக்கு அமைந்திருக்கும் அலகுகள் தண்ணீருக்குள்ளிருக்கும் ஆகாரங்கள் வழுக்கி விழாமலிருப்பதற்கு ஏற்றதாகவும் தங்கள் கூடுகளைப் பின்னிக் கட்டிக்கொள்ளக் கூடியதாகவும், சமயத்தில் தண்ணீரைத் தங்கள் அலகுகளால் துடுப்பைப்போல் தள்ளி நீந்தக்கூடியதாகவும் அமைந்திருக்கின்றன. சில பறவைகளுக்கு உடலுக்கேற்றதாக அலகு அமையவில்லையே என்று சிந்திக்கவும் தோன்றுகிறது. உடலைக் காட்டிலும் மூன்று பங்கு அலகு நீளமாகவும் சில பறவைகளுக்கு இருக்கின்றன.

## விதவித வால்கள், வர்ணங்கள்

தேகத்தின் அளவில் மூன்று மடங்கு வால் நீண்ட பறவைகள் இருக்கின்றன. சில பறவைகளுக்கு வால் விசிறி விரித்தாற்போலவும், சில நீண்டும், சில குட்டையாகவும். சில துடைப்பம் கட்டி இருப்பதைப்போலவும், சில பறவைகளின் வால் இரட்டை ஜடைப் பின்னல் போட்டதைப் போலவும், மற்றும் சில பறவைகளுக்கு வாலே கிடையாதோ என்று ஐயுறும்படியாகவும், சில பறவைகளுக்கு தங்கள் வாலே துடுப்புப்போல் தண்ணீரில் நீந்திச் செல்லவும் உபயோகப்படுத்தும்படியாகவுமிருக்கின்றன.

கழுத்து குட்டையாகவும் தேகத்திலேயே அமைந்திருப்பதுபோலவும் உள்ள சில பறவைகளுக்கு மற்றும் சிலவற்றுக்கு கழுத்து மட்டும் ஒரு கெஜம் நீளமாக வேண்டியபோது நீட்டவும், மற்ற நேரங்களில் சுருக்கிக்கொள்ளவும் (புதர்களிலும், மரக்கிளைகளிலும் உட்கார்ந்தவாறே தங்கள் ஆகாரங்களைப் பிடிப்பதற்கும் உபயோகப்படும்படியான அளவுக்கு நீட்டவும், சுருக்கவும்) கூடியதாயிருக்கின்றன. சில பறவைகள் தண்ணீரைவிட்டு கரையிலிருக்கும்

புதர்களில் முட்டையிட்டு அடை காக்கும்போது தேகத்தைப் புதரில் மறைத்துக்கொண்டு தலையை மட்டும் தூக்கிப் பார்ப்பதற்கு வேண்டிய அளவு சுமார் 2 அடி நீண்டுமிருக்கின்றன.

பறவைகளின் தேகத்தைக் காட்டிலும், கால்கள் 2-3 அடி நீண்டிருக்கின்றன. சாதாரணமாகக் கால்கள் நீண்டிருக்கும் பறவைகளுக்குக் கழுத்தும் நீண்டிருக்கிறது. சில பறவைகளுக்கு வாத்தைப்போல் கால் விரல்களில் தோல் வளர்ந்திருக்கிறது.

பறவைகள் பறக்கும்போது தெரியும்படியான வர்ணங்கள் உட்கார்ந்திருக்கும்போதும் உட்கார்ந்திருக்கும்போது தெரியும் வர்ணங்கள் பறக்கும்போதும் தெரியவில்லை. இவை தங்கள் சிறகுகளை வெயிலில் உலர்த்தும்போது பல வர்ணங்களைக் காணலாம்.

## பறவைகளின் பெயர்கள்

இங்கு காணும்படியான பறவைகளுக்கு உண்மைப் பெயர் தெரியாததாலும் எந்நாட்டுப் பறவைகள் இங்கு வருகின்றனவென்று சரியாகத் தெரியாததாலும் கிராம வாசிகளே சில பெயர்களை இப்பறவைகளுக்கு வைத்துள்ளார்கள். இவற்றில் சிலவற்றை மட்டும் இங்கு குறிப்பிடுகிறேன்:—

1. அரிவாள் மூக்கன், 2. மமுட்டி (மண்வெட்டி) வாயன் (அலகு தட்டையாக இருக்கும்) 3. கலிக்கோ, 4. நீர்க்காக்கை, 5. நாராயணப் பறவை, 6. நத்தை குத்தி, 7. பாம்பு நாரை, 8. வக்கா (இந்த பறவை மட்டும் இரவில் தான் ஆகாரம் தேடும், பகலில் கூண்டிலிருக்கும்) 9. கிளுவை, 10. பூ நாரை, 11. வெள்ளை, 12. திளுவை, 13. சொருக்குருவி, 14. வயல்நாரை, 15. நீர்க்கோழி. 16. குருட்டுக்கொக்கு, 17. சாரைக் கொக்கு, 18. சாத்திக்கொங்கான், 19. மத்தாளிக்கொக்கு, (இதுதான் உருவத்தில்

பெரியது. சுமார் ஒரு ஆள் உயரமிருக்கிறது) 20. நாமக் கோழி, 21. பட்ட கிளுவை, 22. தண்ணீர் உள்ளான். (உருவத்தில் கோழி போலிருக்கும்) 23. நீர்வாத்து.

இவைகளில் நீர்க்காக்கை, நாராயணப் பறவை. கிளுவை மூன்று பறவைகளும் எண்ணிக்கையில் மற்ற பறவைகளைக் காட்டிலும் ஆயிரக்கணக்காக இருக்கின்றன. இது சுமார் ஒரு லட்சத்திற்குமேலிருக்கும் என்பதில் சந்தேகமே இல்லை.

வருஷத்தில் மேலே குறிப்பிட்ட காலங்களில் மட்டும் குறைந்தது இரண்டு லட்சம் பறவைகள் வருவதும், கூட்டம் கூட்டமாகப் போவதுமாக இருக்கின்றன. ஒரு கூட்டத்தில் சுமார் 500 பறவைகளுக்குமேல் இருக்கின்றன.

போர்வீரர்கள் அணிவகுத்து கோட்டையைப் பிடிப்பதுபோல் சுமார் இருநூறு, முந்நூறு நீர்க் காக்கைகள் நூறு கெஜம் சுற்றளவுள்ளதோர் வட்டமாக உட்காருகின்றன. பிறகு எல்லா நீர்க்காக்கைகளும் வட்டமாகவே ஒவ்வொரு அடியாக தண்ணீருக்குள் வட்டத்தைக் குறைத்துக்கொண்டு வருகின்றன. அதே நேரத்தில் வட்டத்திலிருக்கும் சில பறவைகள் தண்ணீருக்குள் மூழ்கி மூழ்கி மீன்களை மத்தியில் சேர்க்கின்றன. கடைசியில் வட்டம் ஓரளவுக்குச் சிறியதாக வந்ததும் மீன்கள் பறவைகளின் வட்டத்திற்குள் சிக்கிக்கொண்டது என்று தெரிந்ததும் எல்லாப் பறவைகளும் தண்ணீரில் மூழ்கி சிறிது நேரத்திலே மேலே கிளம்புகின்றன. ஒவ்வொரு நீர்க்காக்கையின் வாயிலும் தவருது ஒரு மீனைக் காணலாம் அப்போது. இவ்வாறு ஓரிடத்தை முற்றுகையிட்டு மீனைப் பிடித்தபின் எல்லாப் பறவைகளும் பறந்து சென்று மற்றோரிடத்தில் முற்றுகை இடுகின்றன.

## இங்கு மட்டும் வருவதேன்?

ஒவ்வோராண்டும் செப்டம்பர் மாதம் முதல் ஜனவரி மாதம் வரையில் மழைபெய்து ஏரி நிரம்பியது என்று தெரிந்ததும் ஒரே ஜாதிப் பறவைகள் கூட்டம் கூட்டமாக வேடன்தாங்கலுக்கு வர ஆரம்பிக்கின்றன. ஆனால், வெகு தூரத்திலிருந்து வரும் பறவைகளுக்கு ஏரி நிரம்பி இருப்பது எப்படித் தெரியும்? முதலில் சில பறவைகள் மட்டும் வருகின்றன என்றும் மற்றவை தொடர்கின்றனவென்றும் அபிப்பிராயப்படுகிறார்கள். எப்படியோ வருஷந் தவறாமல் அவை வந்து விடுகின்றன. அப்படி அவை குழுமுவதற்குக் காரணமென்ன?—வேடன்தாங்கலிலுள்ள சுமார் ஆயிரம் கிராமவாசிகளும் ஸ்ரீ வெங்கட்டசுப்ப ரெட்டியார் எம்.எல்.ஏ. அவர்களின் குடும்பத்தினரும் தலைமுறை தலைமுறையாக—குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரையில்—இரவும் பகலும் காவல் காப்பதாலேயே இப்பறவைகள் இங்கு வருகின்றனவெனலாம். நம்மைப் பிடிப்பாரும் சுடுவாருமில்லை என்று தைரியமாக அவை வருகின்றன. அப்படி யாராவது சுட்டாலும் சரி, அல்லது தண்ணீர் குறைந்திருக்கும்போது இரவில் பிடிக்கச் சென்றாலும் சரி, எல்லாப் பறவைகளும் தட்சணமே எழுந்து பறந்து வேடன்தாங்கல் கிராமவாசிகளிருக்கும் வீடுகளின்மேல் வட்டமிட ஆரம்பிக்குமாம். பறவைகளின் கூக்குரலைக் கேட்டதும், இரவாக இருந்தாலும் சரி, பகலாக இருந்தாலும் சரி உடனே சென்று அந்த ஆளைப் பிடித்து விடுவார்களாம். ஆளைப் பிடித்ததும் பறவைகள் பழையபடி தங்கள் கூடுகளை நாடிப் பறக்க ஆரம்பித்துவிடுமாம். ஏரியில் கிராமவாசிகளின் அனுமதி இல்லாமல் சுடவோ பிடிக்கவோ இன்றும் என்றும் முடியாது.

• இப்பறவைகள் வர மற்ருெரு காரணம் அவற்றுக்கு வேண்டிய ஆகாரம் முழுவதும் அரை பர்லாங்கு தூரத்திலிருக்கும் மதுராந்தகம் ஏரியில் வசதியாகக் கிடைப்பதால் என்று கூறலாம். இந்த கிராமத்தின் சீதோஷ்ணமும் அவற்றுக்கு ஏற்றதாய் இருக்கலாம். இவ்விதம் உணவும், காவலர்களுடனும் கூடிய வசதியான உறைவிடமும் கிடைப்பதாலேயே ஆண்டுதோறும் பறவைகள் கூடுகின்றன என்பது மிகையாகாது,

இப்பறவைகள் சாதாரணமாக ஜனவரி, பிப்ரவரி துவக்கத்தில் முட்டைகளும் குஞ்சுகளும் பொறித்து ஆயிரக்கணக்கில் தங்கள் இனத்தை விருத்தி செய்துகொள்கின்றன.

இந்த ஏரிக்கரையில் சுற்றி வந்தால் மலஜலம் நிறைந்த தண்ணீர் பச்சை நிறமாகக் காண்கிறது. ஒருவித (பறவைக் கவுல்) நாற்றமும் அடிக்கிறது. இந்நீரைக் கிராமவாசிகள் தங்கள் வயல்களுக்குப் பாய்ச்சுகிருர்கள். இதைவிட நல்ல எரு வேண்டுமா?

## எப்போது முதல்?

இந்தப் பறவைப் புகலிடம் பற்றி ஸ்ரீ ரெட்டியாரிடம் பல குறிப்புகள் இருக்கின்றன. நாட்டின் நலனுக்காக அவைகளை மிகவும் பத்திரமாகப் பாதுகாத்து வருகிருர். அவர் கூறியவை வருமாறு:—

வேடன்தாங்கலுக்கு ஓராண்டில் சுமார் இரண்டுமுதல் மூன்று லட்சத்திற்குமேல் பறவைகள் வருகின்றன. பிறகு இங்கு புதியதாகப் பிறந்தவையும் சேர்ந்து கூட்டம் கூட்டமாக ஜனவரி முதல் பிப்ரவரி மாதம் வரையில் லட்சக் கணக்கில் பறந்து செல்லுகின்றன. அப்படி பறந்து நம்முடைய எல்லையைக் கடந்து செல்லும்போது சிலர் சுடுவது

முண்டு. அவ்வாறு 1939-ம் ஆண்டு சுட்ட பறவைகளில் ஒன்றின் காலில் மாஸ்கோ என்று ஒரு பில்லை இருந்தது. அதை நாங்கள் டாக்டர் ஜோஷ்வா (கிருஸ்தவக் கல்லூரி அதிகாரி) விடம் கொடுத்தோம். பல்லாண்டுகளாக அடிக்கடி அக்கல்லூரி மாணவர்கள் இப்பறவைகளைக் காண வருவதாலேயே அவரிடம் சேர்த்தோம்.

சென்ற வருடம் (16-7-55) இங்கு மழை பெய்தது. அடுத்த மாதம் (7-8-55) பறவைகள் கூட்டங் கூட்டமாக இங்கு வரக் கண்டேன்.

சமீபத்தில் நாராயணப் பறவையின் முட்டை ஒன்று கிடைத்தது. அது வாத்து முட்டையின் அளவில் நீல வர்ணமுடையதாய் இருந்தது.

கி. பி. 1796-ம் ஆண்டு, இன்றுள்ள அபிவிருத்தி செய்யப்பட்ட "குளத்தில் சுடவும் பறவைகளைப் பிடிக்கவும் கூடாது" என்ற அதிகாரப் பத்திரமொன்று காணுமல் போய்விட்டது. பின்னர் கலெக்டராக இருந்த ஜே. பி. டாட் என்பவர் கொடுத்த (கவுல்) பத்திரத்தில் "வேடன் தாங்கல் ஏரியில் கடப்பை மரங்களில் உட்காரும் பறவைகளைச் சுடவும் பிடிக்கவும் கூடாது" என்று பிளேஸ் துரை மூலம் அனுப்பிய அதிகாரப் பத்திரத்தைக் காட்டித் தடுக்கலாம் என்று கண்டிருந்தது. அப்பத்திரமும் காணுமல் போனதால், 8-1-1856ம் ஆண்டு மிகவும் சிரமத்துடன் மறுபடியும் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டது.

1796ம் ஆண்டு பழைய குளத்தை அபிவிருத்தி செய்வதற்குமுன்பே பல நூற்ருண்டுகளாகவே, இங்கு பறவைகள் வந்துகொண்டிருக்கின்றன என்பதற்குச் சில ஆதாரங்கள் இருக்கின்றன.

"தண்ணீர் வற்றிப் போனதும் பறவைகளின் கூடுகளைப் பார்த்திருக்கிறோம். சுமார் பத்து, பதினைந்து வித்தி

யாசமான கூடுகளையும், மரப் பொந்துகளில் கூடு கட்டும், பல விதங்களையும் கண்டோம். இக்காரணங்களைக்கொண்டு இங்கு வரும் பறவைகள் குறைந்தது இருபது வகைப் பறவைகள் என்று நிர்ணயிக்கலாம்'' என்றும் கூறினர் ஸ்ரீ ரெட்டியார்.

## செய்ய வேண்டியதென்ன?

ஆண்டு பூராவும் பறவைகள் இருக்க வசதி செய்தால் பறவைகள் இருக்குமா? என்ற கேள்வி உண்டாகிறது. இந்த வேடன்தாங்கல் ஏரியை நான் பார்த்தபோது பூராவும் நிறையவில்லை. கலுங்கல் மட்டத்திற்கு சுமார் இரண்டடி குறைவாகவே இருந்தது. ஆனால், வளையபுத்தூர் ஏரியும், மதுராந்தகம் ஏரியும் பல மாத காலமாகப் பூரணமாக நிரம்பி, கலங்கல் வழியே உபரித் தண்ணீர் வழிந்து வீணாகிக்கொண்டிருந்தது. இவ்விதம் வீணாகப் போகும் தண்ணீரை வேடன்தாங்கல் ஏரிக்குத் திருப்பி ஏற்கெனவே பறவைகளின் எரு கலந்திருக்கும் வேடன்தாங்கல் ஏரித் தண்ணீருடன் சேர்த்து, அதனை மற்ற ஏரிகளுடன் மறுபடி கலக்கச் செய்தால், நல்ல எருக்களுடன் இதர நிலங்களுக்கும் பாய உபயோகமாக இருக்கும். இதன்மூலம் பறவைகளையும் அதிக மாதங்கள் வேடன்தாங்கலில் தங்கத் தூண்டலாம். மேலும் அடுத்த ஐந்தாண்டுத் திட்டத்தில் வேடன் தாங்கலுக்குச் செல்ல நல்ல ரஸ்தாவும், இளைப்பாறும்விடுதிகளும் பறவைகளை ஆராய்ச்சிசெய்ய நல்லதோர் உண்மையான குழு ஒன்றும் இங்கு அமைத்தல் அவசியம்.

பெரிய வலை ஒன்று கட்டிச் சில பறவைகளைப் பிடித்து அவற்றின் காலில் "இந்தியா'' என்ற தகடுகள் கட்டி, இந்த ஆராய்ச்சியாளர் விட்டுவிட வேண்டும். சில பறவைகளைப் பிடித்து சென்னை மிருகக்காட்சிசாலையிலிருக்கும் குளத்தில் அவை தங்க ஏற்பாடுகள் செய்து, அதன்மூலமும் ஆராய்ச்சி

Y.396:1.211
1965



செய்யலாம். பத்திரிகைகளில் இவ்விடத்தில் வரும் பறவைகளைப்பற்றியும், நாம் எடுத்துக்கொண்டிருக்கும் ஏற்பாட்டின் நோக்கத்தைப்பற்றியும் விளம்பரம் செய்யவேண்டும். இந்தியாவிலும் ஆயிரக்கணக்கான பறவைகளுக்குக் காலில் தகடுகள் கட்டிவிட்டால், இன்னும் இரண்டாண்டில் எந்த நாட்டுப் பறவைகள் இந்தியாவுக்கு வருகின்றனவென்று நம் நாட்டுப் பறவைகள் எந்நாடுகளுக்கு, எந்தெந்தக் காலங்களில் செல்கின்றனவென்றும் தெரிந்துகொள்ளலாம்.

பல்லாண்டுகளாகக் கிராமவாசிகள் பார்ப்பதால், ஆகாய விமானத்தைவிட பறவைகளுக்கு வேகம் அதிகம் என்று கூறுகிறார்கள்.

இவ்வளவு வேகமாகப் பறக்கக்கூடிய பறவைகள் ஏன் காசியிலிருந்து இரண்டு மணி நேரத்தில் திருக்கழுக்குன்றம் வரக்கூடாது என்று சிந்திக்கவேண்டி வருகிறதன்றோ!



